# தே. வி. யின் கீர்த்தனங்கள்

(சென்னை அரசாங்கப் பரிசு பெற்ற நூல்)


கவிமணி

சி. தேசிக விநாயகம் பிள்ளை

இயற்றியது



பாரி நிலையம்

59, பிராட்வே · சென்னை 1.

# முதல் பதிப்பின் பதிப்புரை

கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை அவர்களின் கீர்த்தனங்களை வெளியிடுவதில் நாங்கள் மிக்க மகிழ்ச்சி யடைகிறோம். தமது நூல்களை வெளியிடும் வாய்ப்பை எங்களுக்கு அளித்துவரும் கவிமணி அவர்களுக்கு நாங்கள் பெரிதும் நன்றிக் கடப்பாடுடையோம்.

பத்திரிகைகளில் அவ்வப்போது அங்கொன்று இங்கொன்றாக வெளிவந்த கீர்த்தனங்களைப் படித்து மகிழ்ந்த தமிழ் மக்கள் இப்பொழுது இக் கீர்த்தனத் தொகுதியைப் பெற்று மிகவும் இன்புறுவர் என்று நம்புகிறோம். கவிமணி அவர்களின் கீர்த்தனங்கள் எல்லாம் இலக்கியச் சுவையுடன், உணர்ச்சி நிரம்பி, அழகுற அமைந்துள்ளன. இவை சங்கீதக் கச்சேரிகளிலும், நாட்டியக் கச்சேரிகளிலும், ரேடியோ நிலையங்களிலும் அடிக்கடி பாடப்பட்டு வருகின்றன. சில கீர்த்தனங்கள் இசைத்தட்டுக்களிலும் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இக் கீர்த்தனங்களைப் பாடியும் பாடக் கேட்டும் அனுபவித்த பலர் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்கள். ஒருமுறை 'கலைமகள்' பத்திரிகையில் (1952, செப்டெம்பர்: புரட்டாசி இதழ்) அதன் ஆசிரியர் பின்வருமாறு தே. வி. யின் கீர்த்தனங்களைப் பாராட்டி எழுதியிருந்தனர்:

> **கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை அவர்களின் இனிய கவிதைகளைத் தமிழ் நாட்டினர் இப்போது நன்றாகச் சுவைத்துப் படிக்கின்றனர். அவர்கள் எழுதியுள்ள கீர்த்தனங்கள் இப்போது இசையரங்குகளில் கேட்போருடைய உள்ளத்தைக் குளிர்வித்து வருகின்றன. உடல் நலம் இன்றிப் படுத்த படுக்கையாக இருக்கும் நிலையிலும், இத்தகைய கீர்த்தனங்களை அவ்வப்போது அன்பர்களின்**

**வேண்டுகோளுக்கிணங்க எழுதுகிறார்கள். கடவுளுடைய கருணையை நினைந்துருகும் உள்ளத்தை இந்தக் கீர்த்தனங்கள் வெளியிடுகின்றன. பண்பிலே முதிர்ந்து பழுத்து ஊற்றெடுக்கும் கனிரசமாக இக் கீர்த்தனங்கள் இருக்கின்றன.**

*இத்தகைய இன்னிசைக் கவியமுதமாக விளங்கும் இக் கீர்த்தனங்களைத் தமிழ்ப் பெருமக்கள் பாடிப்பாடிப் பெரு மகிழ்வடைவார்கள் என்று நம்புகிறோம்.*

*கவிமணி அவர்களின் நூற்பதிப்புக்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக எங்களுக்கு உதவி வருபவர்கள் பேராசிரியர் உயர்திரு எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்களாவர். அவர்கள் இந்நூலுக்குச் சிறந்ததொரு முன்னுரை அளித்துள்ளார்கள். கீர்த்தனங்களை முறைப்படுத்திப் பதிப்பு வேலைகளைக் கவனித்தவர் திரு. வித்வான் மு. சண்முகம் பிள்ளை அவர்களாவர். திருச்சி சங்கீத வித்வான் திரு. கே. சி. தியாகராஜன் அவர்கள் கீர்த்தனங்களுக்கு இசையமைத்துத் தந்தனர்.*

*இவ்வாறாக இந்நூல் நல்ல முறையில் வெளிவர உதவி செய்த இந்த அறிஞர்களுக்கு எமது நிலையத்தின் நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.*

*பாரி நிலையம்*
*10—6—'53*

**பாரி நிலையத்தார்**

# நன்றியுரை

**சி**ல ஆண்டுகளாக நான் அவ்வப்போது பாடி வந்த கீர்த்தனங்கள் இப்பொழுது தனித் தொகுதியாக வெளி வருகின்றன. இக்கீர்த்தனங்களில் பெரும்பாலன 'கலை மகள்' பத்திரிகையில் வெளிவந்தன. அன்றியும், 'கல்கி', 'ஆனந்தவிகடன்', 'சக்தி,' 'கலைக்கதிர்', 'அமுதசுரபி', 'அணிகலம்', 'தேவி', 'குமரி' முதலிய பத்திரிகைகளில் ஒரு சில கீர்த்தனங்கள் வெளிவந்தன. இப் பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கு எனது நன்றி.

எனது நூல்களைப் பார்வையிட்டு நல்ல முறையில் வெளிவரச் செய்து வருபவர் வித்வான் மு. **சண்முகம் பிள்ளை**. அவருக்கு என் அன்பு நிறைந்த ஆசி. பதிப்பு முறையில் ஏற்படும் ஐயங்களை அவ்வப்போது நீக்கி, இந் நூலுக்கும் எனது பிற நூல்களுக்கும் அரியமுன்னுரைகள் எழுதி அளித்தவர் எனது அருமை நண்பர் பேராசிரியர் **எஸ். வையாபுரிப் பிள்ளை** அவர்களாவர். அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரித்தாகிறது.

கீர்த்தனங்களுக்கு இராக - தாளம் அமைத்த அன்பர் திருச்சி சங்கீத வித்வான் திரு. **கே. சி. தியாகராஜன்** அவர்களுக்கு எனது நன்றி.

இந் நூலையும் எனது பிற நூல்களையும் மிகச் சிறந்த முறையில் அழகாக அச்சிட்டு வெளிப்படுத்தி வரும் பாரி நிலையத்தாருக்கு எனது பாராட்டு உரித்தாகிறது.

புத்தேரி }
6—6—'53 }

**சி. தேசிக விநாயகன்**

# முன்னுரை

தற்காலத்துள்ள கவிஞர்கள் அனைவரிலும் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை தலைசிறந்தவர் என்று முன்பு ஒருமுறை நான் எழுதினேன். இது உபசாரமல்ல, உண்மையே என்பது நாட்கள் செல்லச் செல்லத் தெள்ளத் தெளிவாகி வருகிறது.

கவிமணியின் கவிதைகள் தமிழர் பண்பாட்டிலும் மரபிலும் பிறந்தவை; உள்ளத்தே அமுதூறத் தித்திப்பவை. சுவைத்துச் சுவைத்துச் சொல்லுந்தோறும் இனிமை கனிந்து சுரப்பவை. பார்ப்பதற்கு இனிதாய், மோப்பதற்கு நறியதாய், வாயிலிட்டுச் சுவைக்குந்தோறும் ரஸங்கனிந்து ஊறுவதாய், உள்ளுந்தோறும் அமுதெனத் தித்தித்து அவாவை மேன்மேலும் பொங்கியெழச் செய்வதாயுள்ள இன்னறுங் கனியை ஒத்திருப்பவை கவிமணியின் கவிதைகள். இக் கவிதைகள் திடீரெனக் காய்ப்பதுமில்லை; திடீரெனக் கனிவதுமில்லை. ஆன்ம-பரிபக்குவ காலத்திலேதான் காய்த்து முதிர்ந்து இவை கனிய வல்லவை. கவிமணியை நேரிற்காணும் பேறுபெற்றோர், அவரது ஆன்ம பரிபக்குவ நிலையை உணர்வார்கள். அத்தகைய நிலையிலிருந்துதான் 'மலரும் மாலையும்,' 'ஆசிய ஜோதி' முதலிய கவிதைத் தொகுதிகள் தோன்றவல்லன என எளிதில் தெரிந்து கொள்வார்கள்.

இந்த ஆன்ம நிலையின் ஒரு முகப்பினையே 'மலரும் மாலையும்' என்ற தொகுதியில்* காண்கிறோம் இகமும் பரமும் இதில் கலந்து கூட்டுறவுகொண்டு இனிமையாய் விளங்குகின்றன. புத்தபிரானைப் பற்றிய பாடல்கள் இக

* முதற்பதிப்பில் ஆசிய ஜோதியும், உமார் கய்யாம் பாடல்களும் 'மலரும் மாலையும்' என்ற தொகுதியில் ஒரு சேர வெளியிடப்பட்டன. பிற்பதிப்புக்களில் அவை இரண்டும் தனித்தனி நூல்களாக வெளிவந்துள்ளன.

வாழ்வின் சிகரமாய் மேம்பட்டு நிற்கின்றன. இக வாழ்வை மகிழ்ச்சி நிரம்பச் செய்யவல்ல நாட்டுப் பாடல்கள், இயற்கைபற்றிய பாடல்கள் முதலியன இவ்வாழ்வின் பலதிறப்பட்ட அம்சங்களேயும் நம் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றச் செய்து விடுகின்றன. சிறுவர் சிறுமியரைப் பற்றிய பாடல்கள் அவர்களிடத்தே சிறந்து விளங்கும் தெய்விகத் தன்மையை நமக்கு விளங்க வைக்கின்றன. அவர்களைத் 'தெய்வமொடு ஜீவன் வசிக்கும் திருக்கோயில்கள்' என்று கூறலாம். இக்கவிதைத் தொகுதிகளில் நேரே தெய்வம் பற்றிய பாடல்களும் சில உள்ளன. இவையும் இகவாழ்வு நிரம்புவதற்கு இன்றியமையாது வேண்டப்படும் தெய்வ உணர்ச்சியை நமக்கு ஊட்டுகின்றன. மீராபாயின் சரிதப் பாடல்கள் இகமும் பரமும் போராடி, முடிவில் பர வாழ்க்கை வெற்றி கொண்டதை இருவகை வாழ்விற்கும் பொதுவாகிய அன்பின் மூலமாய்ப் புலப்படுத்துகின்றன.

இந்நிலையினின்றும் விளேந்து இதனினும் சிறந்து காணும் நிலையொன்றைக் கவிமணியின் ஆன்மா எய்தியுள்ளது. இப் பிற்பட்ட கனிவுதான் கவிமணியின் கீர்த்தனங்களிலே காணப்படுவது. சாதாரணச் செய்யுட்களுக்குரிய இலக்கணத் தளேகளேக் கீர்த்தனங்கள் தகர்த்தெறிந்து விடுவதுபோல், கவிமணியின் ஆன்மாவும் இக வாழ்வு பற்றிய தளேகளேயெல்லாம் முற்றத் தகர்த்தெறிந்துவிட்டது. ஐகிக நாட்டமே இந்நிலையில் இல்லே; பரம்பொருள் பற்றிய நாட்டமே இதில் ஒளிவிட்டுத் திகழ்வது. நன்கு முதிர்ந்து பழுத்த நறுங்கனியின் தன்மையை ஒத்துள்ளது கவிமணியின் ஆன்மா. 'தாமரை யிலேயில் தண்ணீர்போல' என்று ஆன்ம ஞானிகள் கூறுவது கவிமணியின் ஆன்ம-பரிபக்குவ நிலேயை நன்கு உணர்த்துகிறது.

இப் பரிபக்குவ நிலேயில் உலகனைத்தையும் அருளாணே செலுத்திப் பரிபாலித்து வரும் மூல பரம்பொருளின் மீதுள்ள பக்தியே எங்கும் காணப்படுகிறது. இப் பரம்பொருளின் பேதங்களாகவே நமது சமயத் தெய்வங்களும் பிறசமயத்தெய்வங்களும் கொள்ளப்படுகின்றன. கம்பரும்

*கல்லிடைப் பிறந்து போந்து*
*கடலிடைக் கலந்த நீத்தம்*
*எல்லையில் மறைக ளாலும்*
*இயம்பரும் பொருளீ தென்னத்*
*தொல்லையின் ஒன்றே யாகித்*
*துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்*
*பல்பெருஞ் சமயம் சொல்லும்*
*பொருளும்போல் பரந்ததன்றே.*

(பால, ஆற்றுப். 19)

என்று மூல பரம்பொருளின் தன்மையையும், சமயங்களின் தன்மையையும் விளக்கியுள்ளார். இத்தெய்வங்கள் நாம ரூபாதிகளால், வேறுபடுகின்றனவே யன்றி, உண்மைத் தத்துவத்தில் வேறுபடுவன அல்ல என்பதை இம் மகாகவியே பிறிதோரிடத்துக் கூறுகின்றனர் :

*பேரை ஒரு பொருட்கே பல்வகையாற் பேர்த்தெண்ணும்*
*தாரை நிலையை தமியை பிறரில்லை;*
*யாரைப் படைக்கின்றது? யாரை அளிக்கின்றது?*
*யாரைத் துடைக்கின்றது? ஐயா! அறியேமால்!*

(யுத்த. இரணிய. 159)

இங்குக் கூறிய பொதுநோக்குடனே கவிமணி பற்பல தெய்வங்களைப்பற்றியும் கீர்த்தனங்களைப் பாடியுள்ளார் என்பது நன்றாக மனங்கொள்ளத் தக்கது. சமய விகற்பங்களை மனத்துட் கொண்டு அவற்றை ஆதரிக்கும் முறையில் சிவன், திருமால், முருகன் முதலிய தெய்வங்களைக் குறித்துக் கீர்த்தனங்கள் இயற்றப்பட்டன என்று கருதுதல் தவறாகும். தெய்வங்களைச் சம நிலையில் வைத்து அவற்றைக் குறித்துப் பாடியுள்ளார் என்பதும் பொருத்தமன்று. சமநிலை என்ற கருத்தே ஆசிரியரது உள்ளத்தில் நிலவாதது. நாமரூபங்களை யெல்லாம் கடந்து நிற்கும் பரம்பொருளை இவற்றைக் கற்பித்தன்றிப் பிறவாறு பாடுதல் இயலாது.

*ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றுமில் லாற்குஆயிரம்*
*திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ?*

(திருவாச. தெள்ளே. 1)

என்று மாணிக்கவாசகர் கூறியது போலவே நமது கவி மணியும்,

ஒருநாமம் ஓருருவம்
ஒன்று மில்லாற் காயிரம் –

(திருநாமம் பாடி வாழ்த்துவோம்)

என்று பாடியுள்ளமை (பக். 64) இங்கு அறியத்தக்கது. திருநாவுக்கரசர்,

மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லால்,
ஒப்புடைய னல்லன்; ஒருவனல்லன்;
ஓரூர னல்லன்; ஓருவம னில்லி;
அப்படியும் அந்நிற மும்அவ் வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்,
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.

(தேவாரம் VI, 97, 10)

என்று கூறுகின்றார்.

கவிமணி இப் பரிபக்குவ நிலையை அடைவதற்கு ஒரு வியாஜமாயிருந்தது தமிழிசை இயக்கம். ஆனால், அவரது கீர்த்தனங்கள் அனைத்தும் இவ்வியக்கத்தின் காரண மாகவே தோன்றின எனல் பொருத்தமில்லை. தொடக்கத் தில் சிறிதளவு இவ்வியக்கம் இவரை ஊக்கி யிருத்தல் வேண்டும். ஆனால், இசையினால் மனம் கனிவு பட்ட பொழுது இவ்வியக்கத்தைப் பற்றிய நினைவு அறவே ஒழிந்துவிட்டது. இசைப் பொருளிலேயே மனம் ஆழ்ந்து ஈடுபட்டு நின்று அதன் மயமாகக் கவிமணி பரிணமித்து விட்டனர் என்றே கூறுதல் வேண்டும். எனவே, வட மொழிக் கீர்த்தனங்கள், தெலுங்குக் கீர்த்தனங்கள் முதலியவற்றை முற்றும் ஒழித்துத் தமிழ்க் கீர்த்தனங் களின் சார்பாகவே முற்றும் நின்று, இசை விவகாரப் பூசலில் இவர் கலந்துகொண்டார் என்று கருதுவது பெரிய தொரு தவறாகும்.

கவிமணி இயற்றியுள்ள கீர்த்தனங்களின் இயல்பை நோக்கினால், பூசற் கருத்து முதலியவற்றிற்குச் சிறிதும் இடமில்லையென்பது விளங்கும்.

மக்கள் இயல்பையும் உலக இயல்பையும் பரிசீலனை செய்த ஒரு ஞானிக்கு மனிதனது அற்பத் தன்மையும் அவனது அறிவு ஆற்றல்களின் சிறுமையும் எளிதிற் புலப்படும்.

உன்னாலே என்ன ஆகும்?—ஏழை மனிதா!
உன்னாலே என்ன ஆகும்?

என்ற கீர்த்தனம் (பக்கம், 42) இக் கருத்தினையே உட்கொண்டது. இக் கருத்தினால் நிறைந்த உள்ளத்தின் இயல்பை அறிந்துகொள்ளுதல் இன்றியமையாதது. இவ்வுள்ளம் பாதை அறியாதபடி பரிதவித்து உழலும் (பக்கம், 52). எங்கு நோக்கினும் அச்சமே இதனை வருத்தும் (பக்கம், 54). இவ்வுள்ளத்திலே களைகள் ஆகிய குற்றங்கள் நிரம்பி உண்மைக் கதிர் செழித்தோங்குவதற்குத் தடையாய் நிற்கும் (பக்கம், 56). வீண் முயற்சிகளில் மூண்டு நின்று அவதியுறும் (பக்கம், 58). உண்மையான நெறிகளிற் செல்லாது தடுமாறும் (பக்கம், 53).

மக்களது உள்ளத்தியல்பு இவ்வாறாக, இறைவன் இயல்பு மாறாகவுள்ளது. ஈடும் எடுப்புமிலா ஏக பரம் பொருளாகிய அவன் நமக்கு மிகச் சேய்த்தாயிருக்கின்றான். எனினும், அப்பனும் அம்மையும்போல் அவன் அணியனாயும் இருக்கின்றான். அவனைத் தேடித் திரிந்தால் காண இடங்கொடான் (பக்கம், 15-16). ஊனக்கண்ணால் நோக்கினால் சோதி சொரூபனாகிய அவனுடைய பேரொளியும், எங்கும் உலவி வரும் அவனது காட்சியழகும் காண முடியாதவையாயுள்ளன; இரண்டல்ல, ஆயிரம் கண்கள் இருந்தாலும் அவை போதா: மனக்கண்ணினால் மாத்திரமே அவன் அறிதற்குரியவன் (பக்கம், 27). அவனது தன்மை இயற்கைத் தோற்றங்களில் வெளிப்படுகின்றது (பக்கம், 17). சரத் காலமும் அவனது அற்புதக் காட்சியையே நமக்கு வெளிப்படுத்துகிறது (பக்கம், 71). அக் காலத்தில் நமது உள்ளத்தில் ஊக்கத்தை நிரப்பிக் களிப்

பைப் பெருகச் செய்து, விளையாட்டுக்களில் பற்று விளைத்து, இன்னிசைகளில் இன்புறச் செய்து மகிழ்விக்கும் இயல்புடையவன் (பக்கம், 72). மனத்தை வசீகரிக்கும் இனிய கதைகளுக்கு அவன் நாயகனாக விளங்கும் இயல்புடையவன் (பக்கம், 18).

அவன் அருள்மயமாக உள்ளவன். எனினும், பாத்திரங்களின் இயல்பறிந்து, பக்குவமறிந்து, சமயமறிந்து இரக்கங் காட்டி அருள்புரிவான் (பக்கம், 66). அவன் சிற்சில காலங்களில் சித்திரத்திலும் சிற்பத்திலும் காணக் கூடாத பேரழகுடைய மோகினியாகி நமக்குக் காட்சியளித்து வசீகரிக்கும் தன்மை வாய்ந்தவன் (பக்கம் 73).

இங்ஙனமாயிருந்தும் இறைவனது அருள் - தன்மை ஒன்றே நமது வியப்புணர்ச்சியை முற்றும் கவர்ந்து விடுகிறது. இவ்வருளைப் பெறுதற்கு உரிய அறிவுரைகள் உள்ளத்திற்கு இன்றியமையாதவை. எப்பொழுதும் அவனுடைய குணவிசேஷங்களை நினைந்து நினைந்து அவனை நினைவிலிருத்தவேண்டும் என்று அறிவுறுத்தப் படுகின்றது (பக்கம், 13). வீண் முயற்சிகளில் மனத்தை அலையவிடாது அவனை வந்தனை செய்வதிலும் வாழ்த்தெடுப்பதிலும் நமது காலம் செலவிடப்படுதல் வேண்டும் (பக்கம், 22). அவனது சாந்நித்யம் விளங்குவதாகக் கருதப்படும் தில்லை முதலிய புண்ணிய ஸ்தலங்களில் சென்றால் நமது மனமும் தூயநிலையை அடையும். அவ்வாறு செல்லவேண்டும் என ஓர் உபதேசம் அளிக்கப்படுகின்றது (பக்கம், 45). உள்ளத்தை நோக்கி, அவனைச் சென்றடைய வழியில்லை என்று வாடி வருந்தவேண்டாம். உயிரினங்களை யெல்லாம் காத்தற்குக் கங்கணம் பூண்டுள்ளான் அந்தக் கருணாகரன். தான் நஞ்சினை உண்டுங் கூடப் பிறருக்கு அருள் புரியும் பேரருளாளன். இவன் உனக்கு அருள் செய்யாதிருக்கமாட்டான். நீ செய்ய வேண்டுவதெல்லாம் அவன் புகழைப்பாடிப் பணிவதொன்றே (பக்கம், 46-47). அவனுடைய திவ்ய சரித்திரங்களிலே எத்தனையோ அருட் செயல்கள் புலப்படுகின்றன. அவற்றைப்பற்றி நெஞ்சமே நீ நித்தமும் பாடிப் பரவுதல் வேண்டும் (பக்கம், 48).

மலைவு என்பது உன்னிடம் இருக்கக் கூடாது. அதற்கு ஒரு காரணமும் இல்லை. அலையாழி புரளாமலும் அண்டங்கள் சிதறாமலும் அவன் நிலையாய் நிறுத்துகின்றவன். உன்னைக் கைதூக்கி ஆள்வதற்குச் சிறிதும் பிற்பட மாட்டான் (பக்கம் 46). நீ அச்சங் கொள்ளவும் வேண்டுவதில்லை; யமன் வரினும் அச்சம் கொள்ள வேண்டாம். உன் கையிலே யமனையும் வெற்றிகொள்ளத் தக்க ஆயுதம் இருக்கிறது. இறைவனது சின்னங்களை அணிந்து அவனது திருநாமங்களைக் குறிக்கும் மந்திரத்தை ஓதுவாயானால் எதற்கும் நீ அஞ்சுதல் வேண்டாம் (பக்கம் 50).

அச்ச மில்லைநெஞ் சேஅரன நாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயற

(தேவா. V, 60, 2)

என்று அப்பர் கூறவில்லையா?

என்ன செய்வேன் என்று நீ தளரவும் வேண்டாம். கடந்த நாட்களெல்லாம் வறிதே போக்கி விட்டதாகக் கருதி நீ கலங்குதலும் வேண்டாம். அவன் உனக்கு அருள்புரிதல் உறுதி (பக்கம். 51).

இவ்வாறெல்லாம் நெஞ்சிற்கு அறிவுரை கூறி, அவன் மீது வைக்கும் பக்தியொன்றே ஆன்ம ஈடேற்றத்திற்குரிய வழி யென்று பல இடங்களிலும் கவிமணி வற்புறுத்துகிறார். இப் பக்தியினால் ஆசிரியரை முற்றும் கவளீகரிக்கின்ற பேரவா ஒன்று, 'கண்டு தொழ வேண்டும்' 'வேறெதும் வேண்டேனே' (பக்கம். 62-63) என்ற இரண்டு கீர்த்தனங்களிலும் வெளியாகின்றது. நந்தனாரது உள்ளப்பாங்கே இங்கும் நமக்குப் புலனாகின்றது. பக்தி பரவசத்தில் இறைவனது அருளைப் பலவாறாக இவர் வேண்டுகின்றார் (பக்கம். 6, 51, 59, 68). இவ் அருளே அடைக்கலம்; அன்றி வேறு புகலில்லை என்பது ஒரு சில கீர்த்தனங்களில் உணர்த்தப் படுகிறது (பக்கம். 11, 68). இவ் அருளைப் பெற்று விட்டால் எதற்கும் தயங்க வேண்டுவதில்லை என்ற மனத்திட்பம் ஒரு கீர்த்தனத்தில் உணர்த்தப் படுகிறது (பக்கம். 70). இறைவனை முற்றும் நம்பி, அவன்மீது பாரத்தை வைத்தல்தான் இவ் அருளைப்

பெறுதற்குரிய மார்க்கம் என்பதும் நமக்கு உபதேசிக்கப் படுகிறது (பக்கம். 10, 88). இவ்வாறு அருளைப் பெற்ற பின் நமது மனம் இறுமாப் பெய்துகின்றது; விதியையும் வெல்ல முடியும் என்று துணிந்து அறைகூவுகின்றது (பக். 43). ஊரூராய்ச் சுற்றுதல் வேண்டும் என்று பறை கொட்டுகின்றது.

நம்பும் அடியார்க்கெந்
நாளும் அருள்வானைச்

(சிந்தனை செய்வோமே)

என்று நாடறிய விளம்பரம் செய்கின்றது (பக். 61). பக்தியைத் துணைக்கொண்டு, அருள் இரந்து, இறைவன் பால் மனம் விரைவுபட்டு விரும்பிச் செல்வதைக் கீர்த் தனங்கள் பலவற்றிலும் காணலாம்.

இங்ஙனமாகப் பக்தி நெறியில் நிற்பவன் தன்னை நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் பாவித்துக் காதல் நெறியில வழிபட்டுச் செல்வது எல்லாச் சமயங் களிலும் காணப்படுவதொன்றே.

இந்நெறி இறைவனுக்கும் உயிர்களுக்கும் இருக்கும் அன்னியோன்யத் தொடர்பினை இனிதாய் அழகுபெற விளக்குவது; உள்ளஞ்சென்று பற்றுவதற்கு எளிதா யுள்ளது.

தமிழ் நாட்டில் இந்நெறி பெருகி விளங்குவதற்குத் தக்க வாய்ப்பும் இருந்தது. தேவாரத் திருப்பதிகங்களில் பல இடங்களிலும் இந்நெறியைக் காணலாம். சங்க காலந் தொட்டு காதல் - துறைப் பாடல்களை இயற்றி அவற் றைப் பயின்றுவந்த தமிழ் மக்கள் அவற்றின் இன் சுவை யில் ஈடுபட்டு ஆழ்ந்து விடுவது முழுதும் இயல்பே யாகும். பின்னர், 9, 10-ம் நூற்றாண்டளவில் கோவை முதலிய பிரபந்தங்களில் இவ் அகத்துறைப் பாடல்கள் பல்வேறு துறைகளாகப் பாகுபடுத்து இயற்றப் பெற்று வந் துள்ளன. மாணிக்கவாசக சுவாமிகளது திருக்கோவை இதற்கொரு சான்று. ஆனால், இவ்வகைப் பிரபந்தங்களில் இறைவனோடு பக்தனுக்கு இருக்கும் தொடர்புமிக அணிய தாய்க் காணப்படுவதில்லை. உதாரணமாக,

காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்
ஏகத் தொருவ னிரும்பொழி லம்பல வன்மலையில்
தோகைக்குந் தோன்றற்கு மொன்ருய் வருமின்பத்
துன்பங்களே

என்ற திருக்கோவைச் செய்யுளைக் (71) கூறலாம். இதனினும் அணித்தாயுள்ளது தலைவனையும் தலைவியை யும் படர்க்கையில் வைத்துக் காதற்குறிப்புத் தோன்றப் பேசுதலாகும். உதாரணமாக,

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்,
மூர்த்தி யவனிருக்கும் வண்ணம் கேட்டாள்;
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்,
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானுள்;
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;
அகன்ருள் அகலிடத்தார் ஆசா ரத்தை;
தன்னை மறந்தாள்; தன்நாமம் கெட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

(தேவாரம், VI, 25, 7)

இதனினும் மிகமிக அணித்தாயுள்ளது காதலி தானே நேர்படக் காதலனைக் குறித்துப் பாடுதலாகும்.

சிறையாரும் மடக்கிளியே, இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன்; மொய்பவளத்
தொடுத்தரளம்
துறையாரும் கடற்ருேணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே

(தேவாரம், I, 60, 10)

என்ற சம்பந்தர் திருப் பாட்டும்,

கருப்பூரம் நாறுமோ? கமலப் பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல் ஆழி வெண்சங்கே!

(நாய்ச்சியார், 7, 1)

என வரும் ஆண்டாள் பாசுரமும் தக்க உதாரணங்களாம்.

இம் மூன்ருவது நிலையினின்றே தே. வி. யின் கீர்த்தனங்களில் பல இறைவன் மீது அவர் காதல் கூர்ந்த செய்தியைப் புலப்படுத்துகின்றன. 'தேடித்தவிக்குதடி' என்ற கீர்த்தனம் (பக். 32, 33) அவரது ஆராத ஆன்ம தாகத்தை உணர்த்துகின்றது. தமது துன்பத்தைத் தணிப்பதற்குக் காதலன் இன்னும் வரவில்லையே என்றும் காதல் நோயால் தாம்படும் வருத்தத்தைக் காதலன் அறியவில்லையா என்றும் கேட்டுத் தமது ஏக்கறவை இரண்டு கீர்த்தனங்களில் தே. வி. புலப்படுத்துகின்றனர் (பக். 34, 35). இவற்றுள், 'இன்னம் வந்தாரில்லையே' என்பதில் இறைவனுடைய குணம், செயல் முதலியவற்றில் ஈடுபட்டு அநுபவித்து நிற்கின்ருர்; தமது ஆராமையால் காதலன் செயல்களில் சிறிது நகைச்சுவையும் காணுகின்ருர்.

செந்தமிழ்ப் பண்ணிலே
சிக்கிக் கிடக்கின்ருரோ ?
வந்தியின் பிட்டுக்கு
வழக்காடி நிற்கின்ருரோ ?
சுந்தரன் வேண்டிடத்
தூது நடக்கின்ருரோ ?
எந்தத் திசையேகி
என்னசெய் கின்ருரோ ? (பக். 34)

என்ற சரணப்பகுதியால் இது விளங்கும். காதலை மட்டும் புலப்படுத்துவதைக் காட்டிலும் காதலனுடைய குணம், செயல் முதலியவற்றை விவரித்துக் கூறி, அவற்றை அநுபவித்துத் தனது பிரேமாதிசயத்தைக் காதலி புலப்படுத்துவது மிகமிகச் சிறந்த நிலையாகும். இந்நிலையைப் பெரியாழ்வார், ஆண்டாள் முதலியோர்களது திருப்பாசுரங்களில் மிகுதியும் காணலாம்.

கற்றினம் மேய்க்கிலும் மேய்க்கப் பெற்ருன்;
காடுவாழ் சாதியும் ஆகப் பெற்ருன்;
பற்றி உரலிடை யாப்பு முண்டான்;
பாவிகாள், உங்களுக் கேச்சுக் கொலோ ?

கற்றன பேசி வசையு ணாதே
காலிகள் உய்ய மழை தடுத்துக்
கொற்றக் குடையாக எந்தி நின்ற
கோவர்த் தனத்தென்னை யுய்த்திடுமின்.
(நாச்சியார். 12, 8)

காதலர்கள் பிரிந்து நிற்கும் நிலையிலே ஓர் இரவு ஓர் ஊழியாகத் தோன்றும் என்பதனை மிக அழகாக,

இருளும் நீங்கிடாதோ? — சூரியனும்
எழுந்து வந்திடானோ ?

என்ற கீர்த்தனம் (பக். 36) புலப்படுத்துகின்றது. தனது ஆராமையைத் தோழியிடம் கூறித் தான் தீயில் விழுந்த புழுவாய்த் துடிக்கின்ற நிலைமையையும், தான் தூதாக விடுத்த கிளி மீண்டு வாராமையையும் சொல்லிப் புலம்புகின்றமை ஒரு கீர்த்தனத்தில் (பக். 38) நயம்பெற உணர்த்தப் படுகின்றன. வேறொரு கீர்த்தனம் (பக். 39) தனக்கும் தனது நாயகனுக்கும் நிகழ்ந்த அன்னியோன்யமான அன்புரையாடல்களைக் குறிப்பிட்டு, அவர் பிரியா விடைபெற்றுச் செல்லுகின்றபொழுது, இன்ன காலத்தில் மீள்வேன் என்று கூறியிருந்தும், அங்ஙனம் அவர் வாராமை குறித்துப் புலம்புகின்றது. இவ்வாறு வாராமையால், வருந்தியிருக்கும் தலைவி நல்ல சகுனம் நோக்கித் தலைவனிடம் தூது போகும்படி தோழியை வேண்டுகிறது ஒரு கீர்த்தனம் (பக். 40). காதலியின் அன்னை அவள் காதலால் பைத்தியங் கொண்டவள்போல் இருப்பதை உணர்ந்து, காதலனது ஏழமைத் தன்மையையும், பயங்கரக் கோலத்தையும், இவற்றோடு அவன் பித்தனாயிருக்கின்ற நிலைமையையும், எடுத்துக்கூறி, அவள் மனத்தைத் திருப்ப முயல்கிறது வேறொரு கீர்த்தனம் (பக் 41). தலைவன் வருகின்றான்; அவன் ஊதும் குழலோசை கேட்கிறது; அவ் இன்னோசையானது தலைவியைப்பற்றி இழுத்துச் செல்கின்றது. இந்நிலையை ஒரு கீர்த்தனம் (பக். 67) புலப்படுத்துகிறது. இக் குழலோசையைக் குறித்து,

*சிறுவி ரல்கள் தட விப் பரிமாற,*
*செங்கண் கோடச் செய்ய வாய் கொப் பளிப்ப,*
*குறுவெ யர்ப் புரு வம் கு டிலிப்பக்*
*கோவிந் தன் குழல்கொ டூதினபோது,*
*பறவை யின் கணங்கள் கூடு துறந்து*
*வந்து சூழ்ந்து படு காடு கிடப்பக்*
*கறவை யின் கணங்கள் கால்பரப் பிட்டுக்*
*கவிழ்ந் திறங்கிச் செவி யாட்ட கில் லாவே*

என்ற பெரியாழ்வார் பாசுரம் (VI, 8) இங்கே அறிதற்குரியது. இவ்வாறுள்ள பக்திப் பெருக்காலும் ஆராக் காதலாலும் இப்பூலோகமே சுவர்க்கமாக ஆகிவிடுகிறது (பக். 41). தனக்கு அருள் புரிந்த காதலன் வசிக்குமிடம் காதலிக்குச் சுவர்க்கமே யல்லவா ?

*கண்ணுரக் கண்டுமகிழ் ஸ்வர்க்கம்*
*கனக சபையல்லவோ ?*

என்பது இக் கீர்த்தனம் (பக். 44).

இந்தச் சுவர்க்கத்தில் வீற்றிருக்கும் பிரஜைகள் யாவர்? அங்கே, ஆதிப் பொதுமறையை இயற்றியருளிய திருவள்ளுவர் (பக். 76); சைவப் பயிர் வளர்த்த ஆறுமுக நாவலர் (பக். 67); ஆலய வாசலை அனைவர்க்கும் திறந்த மூலமன்னர் மருகர் சித்திரை மன்னர் (பக். 79); பற்பல கலைகளும் பல்கி வளர்ந்துவரச் செய்த அண்ணுமலை அரசர் (பக். 80);

*ஏதும் கதியிலாத*
*எளியரைக் காப்பதற்கு*
*ஜாதி சமயக் கொடும்*
*சண்டை ஒழிப்பதற்குத்*
*தீதிலா அறப்போரில்*
*ஜயக்கொடி நாட்டுதற்குப்*
*போதிமா தவனெனப்*
*புவியில் அவதரித்த*

புண்ணிய மூர்த்தியாகிய காந்திமகான் (பக். 81).

சுவர்க்கத்திலே சுதந்திரம் நிலவுகின்றது (பக். 82-85). சுதந்திரக்கொடி வானுறவோங்கி நிதமும் பறந்து விளங்குகிறது (பக். 86, 87.) இந்தச் சுவர்க்கத்திலே ஓர் அழகிய மண்டபம் விளங்குகின்றது. அதுதான் பாரதி மண்டபம். அது பாரத சக்தி வளர்கின்ற பீடம்; பைந்தமிழ்க்கு ஆலயம்: வீர சுதந்திரத்தின் வெற்றி நிலைக்களம் (பக். 78). இவற்றை யெல்லாம் அழகிய கீர்த்தனங்களில் பாடுதற்கு ஆசிரியர் இன்னிசை வரம் வேண்டுதல் இயல்புதானே! (பக். 6, 7).

சுவர்க்கத்திலும் கவலைகளுண்டு; பிணி உண்டு; பிழைகள் உண்டு; முடிக்க வேண்டும் குறைகளுண்டு. கவலைகளைப் போக்கி, பிணியை நீக்கி, குறையை முடித்து, பிழைகளைப் பொறுத்து மன்னித்து ஆட்கொள்ளுதல் வேண்டும் என்று தே. வி. உள்ளம் உருகிப் பாடுகின்றார். ‘எத்தனையேனும் பிறப்பெடுக்கத் தயங்கமாட்டேன், இறைவனை வணங்குவதற்குரிய நிலை வாய்க்குமாயின்’ என்று கூறிய கவிஞர் அறுதியாகப் பிறப்பறுத்தலையே நோக்கமாகக் கூறுகின்றார் (பக். 8). தனது குறைகளை உணர்ந்து தன்னை மன்னித்து, இறைவன் ஆட்சிகொள்ளுதலே கவிமணியின் பிரார்த்தனைகளிற் சிகரமாயமைந்துள்ளது என்று கூறி நாம் அமையலாம் (பக். 9.).

மன்னித் தருள்வா யம்மா!—என் பிழையெல்லாம்
மன்னித் தருள்வா யம்மா!

தாய்தான் மன்னிக்கும் இயல்புடையவள். அவள்தான் தன் குற்றங்களைக் குற்றமாகக் கொள்ளாது மன்னிக்கும் இயல்புடையவள். அவள்தான் தன் குற்றங்களைக் குற்றங்களாகக் கொள்ளாது பரிந்து பேசுபவள். மன்னிக்க வேண்டும் என்ற இப்பிரார்த்தனையில் கவிமணி உலகனைத்தையும் ஈன்ற அன்புடைத் தாயைக் குறித்துள்ளது மிகவும் பொருத்தமாயுள்ளது. இசையினிமையில் உளம் கரைந்து உருகிப் பாடிய கவிமணி சித்தம் அமைதி பெற்று நமது தேசத்தை வாழ்த்துகின்றனர். இவ் வாழ்த்துப்பா கீர்த்தன வடிவிலில்லாமல், விருத்த வடிவாகவே தனியாய் நின்று, முற்கூறிய சித்த அமைதியைத் தனிப்படப் புலப்படுத்துகின்றது. (பக். 90).

இனி, கீர்த்தனங்கள் தமிழ் மொழியில் தோன்றிய வரலாற்றினையும், அவற்றின் இயல்புகளையும் ஒரு சிறிது நோக்குவோம். இசையைப் பற்றியும் நாடகத்தைப் பற்றியும் நமது தொன்னூல்களில் பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஆனால், அவற்றில் கீர்த்தனங்களைப் பற்றிய குறிப்பு எதுவும் இருந்தது என்பதற்குச் சான்று இல்லை. பண்ணைப் பற்றிய செய்திகள் சிலப்பதிகாரத்தாலும், பரி பாடல் என்ற இலக்கியத்தாலும் ஒரு சிறிது விளங்கலாம். அவ்வகைப் பாக்களை நோக்கினும் கீர்த்தனங்கள் இருப்பதற்கு இடமில்லை என்பது புலப்படுகின்றது. முதன் முதலாக, குறவஞ்சி, பள்ளு முதலிய பிரபந்தங்களில் தான் கீர்த்தன முறையில் அமைந்த பாடல்கள் காணப்படுகின்றன. இவ்விரண்டனுள்ளும் முற்பட்டது பள்ளு என்ற பிரபந்த வகையாகும். இதனை 'உழத்திப்பாட்டு' என்றும் கூறுவர். உழத்திப்பாட்டு முதன் முதல் கி. பி. 13-ம் நூற்றாண்டில் தோன்றிய வச்சணந்தி வெண்பாப் பாட்டியலில் காணப்படவில்லை. இதற்குப் பிற்பட்டு சுமார் 14-ம் நூற்றாண்டளவில் தோன்றிய பன்னிரு பாட்டியலில் இவ் உழத்திப்பாட்டு காணப்படுகிறது. இவ்வகையைச் சார்ந்த பிரபந்தங்கள் முக்கூடற் பள்ளு, குருகூர்ப் பள்ளு முதலியன. இவை 16, 17-ம் நூற்றாண்டுகளில் தோன்றியவை. எனவே, 15-ம் நூற்றாண்டிற்கு முன் கீர்த்தன வடிவில் அமைந்த பாடல்கள் இல்லை என்றே துணியலாம். பிற்பட்ட காலத்தில் வரவர இவ்வகைக் கீர்த்தனங்கள் பெருகிக்கொண்டு வந்திருக்கின்றன. அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனை ஓர் எடுத்துக்காட்டு. இந்நூலைப் பின்பற்றி, 'பாரத நாடகம்', 'சகுந்தலை நாடகம்', 'அரிச்சந்திர நாடகம்,' 'பெரியபுராணக் கீர்த்தனை','கந்த புராணக் கீர்த்தனை,' 'திருவிளையாடற் புராணக்கீர்த்தனை', முதலிய நூல்கள் பிறந்தன. இவைகளெல்லாம் கதையொன்றினை எடுத்துக் கொண்டு அதனைக் கீர்த்தனை வடிவில் பாடியனவாகும். தனிப்பட்ட முறையில் அமைந்த கீர்த்தனங்களுமுண்டு. கவிகுஞ்சர பாரதி, முத்துத் தாண்டவராயர், வேதநாயகம் பிள்ளை முதலியோர்களது கீர்த்தனங்களைக் கூறலாம். இவற்றைப் பாடத் தொடங்கியது மிகமிகப்

பிற்பட்ட காலத்திலாகும். தஞ்சையில் ஆட்சி புரிந்த மராட்டிய அரசர்களால் கீர்த்தனங்கள் மிகவும் சிறப் படைந்து விளங்கின. இக் கீர்த்தனங்கள் பெரும்பாலும் தெய்வத்தைப் பொருளாகக் கொண்டன. காதல் பற்றிக் கீர்த்தன் வடிவில் தோன்றிய செய்யுட்களும் உண்டு. இவற்றைப் 'பதம்' என்பர். இப் பதங்கள் அபிநயம் செய்து காட்டுதற்குப் பெரிதும் ஏற்றவை. முற்கூறிய வழிகளில் சில சிறப்பான அம்சங்களைக்கொண்டு தே. வி. யின் கீர்த்தனங்கள் அமைந்திருக்கின்றன.

தே. வி. யின் கீர்த்தனங்களில் பல்லவி பொருளின் உயர் நிலையைச் சுட்டுகின்றது. அதுவே, திரும்பத் திரும்பப் பாடப் பெறுவதால் இங்ஙனம் உயர்நிலையாயிருத்தற் குப் பெரிதும் தகுதி யுள்ளதே. ஒவ்வொரு பல்லவியும் உயிர் நிலையா யிருத்தலோடு, ஆசிரியரது உள்ள ஊற்றி னின்றும் பொங்கி எழுந்து பாய்வதாகும். பல்லவிக்குத் துணையாய் அநுபல்லவி நின்று அதன் பொருளை வளம் படுத்துவதற்கு ஏற்ற முறையிலே சுருங்கி அமைந்திருக் கின்றது. இந்த அநுபல்லவி யின்றியும், கீர்த்தனம் இயன்று வருவதை ஒரு சில இடங்களிற் காணலாம். அவ் விடங்களில் சரணங்களைக் கண்ணி யென்பர் (பக். 17). சரணம் பல்லவியின் பொருளைப் பலவாறாக விளக்கி அதனை மனத்தில் பதிய வைத்தற்குத் துணையாவதாம்.

கீர்த்தனங்கள் அனைத்தும் செம்பாக மாகவும், தெளி வுடையனவாயும், எளிய சொற்களை யுடையனவாகவும் இருத்தல் இன்றியமையாதது. எளிமையிலேதான் அழகு வாழ்வது; தெளிவிலேதான் இனிமை குடியிருப்பது. கடினமான சொற்களைக் கையாளுதல் சிறிதும் ஏற்கத் தகாததாம். இது போன்றே வடமொழியை மிகுதியாகக் கையாண்டு கீர்த்தனப் பொருள் எளிதில் விளங்க வொட் டாது மறைத்து விடுதலும் தக்கதன்றாம். இவ்விதமான குறைகள் தே. வி. யின் கீர்த்தனங்களில் சிறிதும் இல்லை.

தே. வி. யின் கீர்த்தனங்களின் மற்றொரு சிறப்பியல்பு அவற்றிற் காணும் இலக்கியச் சுவையாம். இச் சுவையில் ஒருவகை நமது இலக்கியங்களிற் காணும் செய்திகளையும்

நயமுள்ள சொற்றொடர்களையும் அங்கங்கே எடுத்தாளுதலாம். உதாரணமாக,

அருண கிரிக்குச் செய்த
கருணைசெய் தடியேனை
ஆட்கொள்ளலா காதா?

என்பதைக் காட்டலாம் (பக். 20).

கல்லைப் பிசைந்து கனியாக்க வல்லவர் (பக். 33) என்பதில் திருவாசகத்தில் வரும் ஓர் இனிய சொற்றொடரை (திருவம்மானை, 5) நாம் காணலாம்.

வேறொரு வகை முன்புள்ள செய்யுளின் பொருளை இனிமையுற விளக்கி அமைத்தலாம்.

ஆழி நெடுந்தேரும்—வழியில்
அச்சு முறிந்ததுவோ?
ஏழு குதிரைகளும்—ஒன்றாய்
இடறி வீழ்ந்தனவோ?

என்பது முதலியவற்றைக் (பக். 36) குறிக்கலாம். பிறிதொரு வகை இலக்கியச் சுவை முன்புள்ள இலக்கியச் செய்யுட்களின் பொருளமைதியையும் ரீதியையும் பின்பற்றுதலாகும். உதாரணமாக, ‘திருநாமம் பாடி வாழ்த்துவோம்’ என்பது முதலியவற்றைக் (பக். 61) கூறலாம்.

இவையேயன்றி இலக்கிய கர்த்தர்கள் முதலியோரைப் பற்றப் பாடி அவர்களது இலக்கியங்களின் சுவையையும் ஊட்டுகிறார். ஆதிப் பொதுமறை (பக். 76) என்ற கீர்த்தனத்தை இதற்கு உதாரணமாக் கூறலாம்.

இவை யெல்லாம் இலக்கியச் சுவையென்று பொதுப்படக் கூறுதல் அமையுமேனும், இலக்கியச் சுவை என நான் இங்கே கருதுவது இவற்றையல்ல. பண்டையோர் இலக்கியங்களைப்போலவே, சொல் நயமும், பொருள் நயமும், பிறஅழகுகளும் பொருந்திப் பிழைகள் யாதும் இன்றி தெளிவு உடையனவாய், மனத்தைக் கவரும் இயல்புடையயுனவாய், உணர்ச்சியை எழுப்பவல்லனவாய், இன்பத்தை

விளக்கவல்லனவாய் தே.வி.யின் கீர்த்தனங்களும் அமைந்திருக்கின்றன. இவற்றில் இழிசன வழக்குக்களும் அவையல் வழக்குக்களும் காணப்படவில்லை. இலக்கணப் பிழை சிறிதும் இல்லாதது. பண்டையோர் கீர்த்தனங்களில் இவ்வாறு அமைந்தவை மிகச் சிலவேயாம். பதங்களில் பலவகைக் குறைபாடுகளும் உள்ளன என்பதை அவற்றை கற்றுணர்ந்தோர் அறிவர். சிற்றின்ப உணர்ச்சி மிகுந்து, பிழை மலிந்து, இலக்கியச் சுவை அருகியேயுள்ளனவாய் அவை பெரும்பாலும் காணப்படுகின்றன.

இலக்கியச் சுவையோடு இசை யினிமையையும் கீர்த்தனங்களில் எதிர்பார்க்கலாம். கவிமணி அவர்கள் இவ் இசை யினிமையை நன்கு உணர்ந்தவர்களே. இவ் இசை யினிமையை உணர்தலும் நுகர்தலும் கவிஞனுக்கு இன்றியமையாதன. இவை யில்லாமற்போனால் கவிதை சுவையுறுதல் இல்லை; அதில் இனிமை காணப்படுதலும் இல்லை. அரசகேசரி இயற்றிய 'இரகுவமிசத்திலும்', நிரம்பவழகிய தேசிகர் இயற்றிய 'சேது புராணத்திலும்' இசை யினிமை உளதோவென நோக்கி வேறுபாடறியலாம்.

ஆனால், இசை யினிமையை உணர்தல் வேறு. இசை இலக்கண நுட்பங்கள் முதலியவற்றை அறிதல் வேறு. இசை யிலக்கணத்தில் இராகம், தாளம் முதலியவற்றின் ஞானம் இன்றி யமையாது வேண்டப்படும். கவிஞனிடத்தில் இதனை எதிர்பார்த்தல் தக்கதன்று.

இசை யிலக்கண முணர்ந்தோரே கீர்த்தனம் இயற்ற வேண்டும் என்ற கொள்கையும் பொருத்தமற்றது. பரம்பரை வழக்கும் அதுவன்று. பரிபாடலை எடுத்துக்கொண்டால் செய்யுள் இயற்றியவர் வேறு, பண் முதலியன ஊட்டியவர் வேறு. தேவாரத்தை எடுத்துக்கொண்டால் அதுவும் அப்படியே. ஞானசம்பந்தர், அப்பர் முதலிய அடியார்களது திருப்பாடல்களுக்கு ஆதியில் அமைந்த பண் முறை இப்போது இல்லை. அப் பண்முறை பிற்காலத்தில் மறைந்து விட்டமையால், புதிதாகப் பண் அமைத்தனர் என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. பாவத்திற்குத் தக்கபடி இராக - தாளங்களை

அமைத்தல் ஒரு தனிப்பட்ட திறமை. அத் திறமை கீர்த்தனங்களை இயற்றுபவர்களுக்கு வேண்டுவதன்று. அவ் வகைத் திறமை படைத்தவர் பலரும் இலக்கியச் சுவையின்றிப் பாடுவார்கள். பாவம் என்பதனை ஒரு பொருளாகவே அவர்கள் மதிக்கமாட்டார்கள். ஓசை யினிமை மட்டும்தான் அவர்கள் சிறப்பாகக் கருதுவார் கள். இவ்வகைச் சங்கீத நிபுணர்களுக்கு உதாரணமாகப் பட்டணம் சுப்பிரமணிய ஐயரைக் கூறலாம். இன்றும் அவரது கீர்த்தனங்களைப் படிப்பது பாவத்தின் பொருட் டல்ல; இலக்கியச் சுவையின் பொருட்டுமல்ல. ராக லக்ஷணங்களின் அமைதியை அறியும் பொருட்டேயாம். இவர் இயற்றிய கீர்த்தனங்கள் மிகச் சிறப்புடையன வாகச் சங்கீத வித்வான்கள் மாத்திரமே கருதுவார்கள்.

இங்குக் கூறியவற்றை நோக்கினால் இசை வகுத்தவர் கீர்த்தனங்களை இயற்றியவரின் வேருயிருத்தல் சிறிதும் தவறில்லை என்பது விளங்கும்.

இசைப் பாடல்களைப் பற்றிக் கூறுமிடத்து, அவற் றின் 'இசை யினிமை மக்களின் தினசரி வாழ்வில் நேரும் மலினங்களை யெல்லாம் போக்கவல்லது' என்று மேல் நாட்டு ஆசிரியர் ஒருவர் கூறுகின்றார். இதன் உண்மை தே. வி.யின் கீர்த்தனங்களைக் கற்றுணர்வார்க்கு எளிதிற் புலப்படும்.

திருவனந்தபுரம்
ஸர்வகலாசாலை
4—6—'53

**எஸ். வையாபுரிப் பிள்ளை**

# உள்ளுறை

# நாமகள் துதி

## கட்டளைக் கலித்துறை

நாடிப் புலங்கள் உழுவார் கரமும்,
நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும்,
செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும்,
உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம்
அடைக்கலமே.

# தமிழிசை

## வெண்பா

வெந்தழல் நீராமால்;
    வெள்ளெலும்பு பெண்ணுமால்;
வந்தமத வேழம்
    வணங்கிடுமால்—சந்தமெழப்
பாடுவார் உள்ளுருகிப்
    பாடும் தமிழிசைக்கு
நீடுலகில் உண்டோ
    நிகர்?

# வந்தனை செய்வோம்

**இராகம்—ஹம்ஸ்த்வனி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

வந்தனை செய்வோமே! — மலரடி
வாழ்த்தி வணங்கு வோமே!

**அநுபல்லவி**

சிந்தனை செய்யு முன்னம்
வந்தெனக் கருள் செய்யும்
தந்தி முகனைச் சிவ
சங்கரன் மைந்தனை (வந்தனை)

**சரணம்**

இன்னமு தொழுகும் இசை—தமிழிசை
இந்நிலத் தோங் கிடவே
கன்னல் முக்கனி அவல்
கடலைமோ தகமெலாம்
சந்நிதி முன்படைத்துத்
தாழ்ந்து தலைகுனிந்து (வந்தனை)

# ஆதி விநாயகன்

**இராகம்**—*ஸெளராஷ்ட்ரம்* **தாளம்—ஆதி**

*கங்கையும் வெண்பிறை யுஞ்சடை சூடிய*
*கண்ணுதல் நீயேயாம்;*
*சங்கமும் ஆழியும் அங்கையில் ஏந்திய*
*தண்முகில் நீயேயாம்;*
*மங்கல மாமறை ஓதி மகிழ்ந்திடும்*
*மலரவன் நீயேயாம்;*
*ஐங்கர னே! எமை ஆண்டருள் ஐயனே!*
*ஆதி விநாயகனே!*

# யானைமுகப் பெருமான்

**இராகம்—பிலகரி** **தாளம்—ரூபகம்**

திங்களொடு கங்கைமுடி
சேர்த்தசிவன் நீயே!
திரிபுரங்கள் நீறுபடப்
பார்த்தசிவன் நீயே!

சங்கினொடு சக்கரங்கை
தாங்கியமால் நீயே!
தசமுகனைப் போரிலுயிர்
வாங்கியமால் நீயே!

நங்கைகலை மங்கைதவழ்
நாவின்அயன் நீயே!
நாரணனார் உந்திதரு
பூவினயன் நீயே!

எங்குமுள பரம்பொருளே!
என்றுமுள பொருளே!
யானைமுகப் பொருளே! வந்
தேழைஎனக் கருளே!

# ஒரு வரம்

**இராகம்**—முகாரி **தாளம்—ஆதி**

**பல்லவி**

இன்னிசைக் கவிபாட ஒருவரம்
எனக்கருள் செய்வா யம்மா!

**அநுபல்லவி**

கன்னலும் தேனும்முக்
கனியும் கனிந்தொழுகிச்
சொல்நயம் பொருள்நயம்
தொடைநயம் பெருகவே
(இன்னிசைக்)

**சரணம்**

பன்னரும் செந்தமிழின்
பரிமளம் வீசஉன்றன்
பொன்னடி போற்றிமாலை
புனைந்துய்ய வேண்டிநின்றேன்,
சின்னஞ்சிறிய பிள்ளைச்
சீகாழிப் பிள்ளையைக்கண்
டன்னையென அமுதம்
அளித்த மகேச்வரியே!
(இன்னிசைக்)

# தமிழ் அமுதம்

**இராகம்—ஷண்முகப்பிரியா** **தாளம்—ஆதி**

**பல்லவி**

இன்னிசைத் தமிழ் அமுதம்—இரங்கிநீ
எனக்கருள் செய்வா யம்மா!

**அநுபல்லவி**

கன்னலும் தேனும்முக்
கனியும் கனிந்தொழுகு
சொல்நயம் பொருள்நயம்
தொடைநயம் பெருகவே
(இன்னிசைத்)

**சரணம்**

நாத்தழும் பேறக்கவி
நவநவ மாகப்பாடி,
தோத்திரம் செய்துன்பாதம்
தொழுதிட வேண்டும் அம்மா!
வாய்த்தவெண் தாமரையும்
வணங்கும் அடியருளம்
பூத்தபொற் றாமரையும்
பொலிய விளங்கும் தாயே!
(இன்னிசைத்)

# குமரிப் பகவதி

**இராகம்—கல்யாணி** **தாளம்—சாபு**

**பல்லவி**

*ஒருவரம் அருள்வா யம்மா!—உளமிரங்கி*
*ஒருவரம் அருள்வா யம்மா!*

**அநுபல்லவி**

*கருவிலினும் புகாமல்*
*கவலைக்கும் ஆளாகாமல்*
*திருவடி போற்றியுன்னைத்*
*தினம் தினம் தொழுதுய்ய* **(ஒரு வரம்)**

**சரணம்**

*வேத புராதனியே! சரணம்!*
*விஜய நாராயணியே! சரணம்!*
*ஆதி பராபரையே! சரணம்!*
*அகிலாண்ட நாயகியே! சரணம்!*
*மாதவன் தங்கையே! சரணம்!*
*மங்கை மனோன்மணியே! சரணம்!*
*கோதையங் குழலியே! சரணம்!*
*குமரிப் பகவதியே! சரணம்!*

**(ஒரு வரம்)**

# மன்னித் தருள்வாய்

**இராகம்**—*சாரங்க* **தாளம்—ஆதி**

**பல்லவி**

*மன்னித் தருள்வா யம்மா!—என்பிழையெல்லாம்*
*மன்னித் தருள்வா யம்மா!*

**அநுபல்லவி**

*கன்னி பகவதியே!*
*கருணைத் தடங்கடலே!*
*மன்னர் மகுடம்பூண்ட*
*மதுரை மீனாட்சியே!* *(மன்னித்)*

**சரணம்**

*ஆசைப் பேயாட்ட மெல்லாம்*
*ஆடி அலுத்தே னம்மா!*
*காசைப் பணத்தை நிதம்*
*கண்கண்ட தெய்வ மெனப்*
*பூசை புரிந்த தெல்லாம்*
*பொய்யென் றுணர்ந்தே னம்மா!*
*தாசனாய் இன் றுனையே*
*சரணம் புகுந்தே னம்மா!* *(மன்னித்)*

# பரமேசுவரி

**இராகம்**—*ஸிம்மேந்திர மத்யமம்* **தாளம்**—*மிஸ்ரசாபு*

**பல்லவி**

*உன்னையே நம்பினே னம்மா!—பரமேசுவரி!*
*உன்னையே நம்பினே னம்மா!*

**அநுபல்லவி**

*அன்னையே நின்னையல்லால்*
*ஆழிசூ ழிவ்வுலகில்*
*என்னையா தரித்தாள*
*எவரும் ஒருவருண்டோ?*

*(உன்னையே)*

**சரணம்**

*நில்லா உலக வாழ்வை—ஏழைநான்*
*நிலையென்று கொண்டு நித்தம்*
*பொல்லா வழிகளிலே*
*புத்திகெட் டலைந்திட்டேன்,*
*எல்லாம் நீ பொறுத்துள்ளம்*
*இரங்கி அருள்புரிவாய்!*

*(உன்னையே)*

## தஞ்ச மெனக்கு நீயே!

**இராகம்**—சங்கராபரணம் **தாளம்**—ஆதி

**பல்லவி**

தஞ்ச மெனக்கு நீயே!
தயவு செய்வாய் தாயே!

**அநுபல்லவி**

குஞ்சர வதனனைக்
குமரனை ஈன்றருள்
அஞ்சனி! அபிராமி!
அழகி!பர மேச்வரி! (தஞ்ச)

**சரணம்**

அம்பிகை! மனோன்மணி!
அமிர்த குணசுந்தரி!
உம்பர் பணியும் தேவி!
உத்தமி! சிவகாமி!
வெம்பவம் போக்கிடும்
வேதநாயகி! கௌரி!
நம்பியுன் மலர்ப்பதம்
கும்பிடு கின்றேன்நிதம் (தஞ்ச)

# குல தெய்வம்

**இராகம்—பிலகரி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

பாதார விந்தம் பணிந்தேன்—கடைக்கண்நீ
பாலிக்க வேண்டு மம்மா!

**அநுபல்லவி**

மாதா பிதாவும் நீயே!
மந்த்ர குருவும் நீயே!
ஆதாரம் எனக்கு வே
றுரும் ஒருவருண்டோ? (பாதார)

**சரணம்**

வெம்பு பிணியில் விழுந்து—வருந்திநிதம்
விழிநீர் பொழிகின்றேன்,
கும்பிடும் தெய்வமே!
குலதெய்வமே! உன்னை
நம்பிடும் ஏழையைக்கை
நழுவ விடலாமோ? (பாதார)

# அறவாழி அந்தணன்

**இராகம்**—கேதாரம் **தாளம்**—ரூபகம்

**பல்லவி**

*மறவா திருப்பா யென்மனமே!—என்றும்*
*மறவா திருப்பா யென்மனமே!*

**அநுபல்லவி**

*அறவாழி அந்தணனை*
*ஆதி பகவனை நீ (மறவா)*

**சரணம்**

*பிறவிப் பெருங்கடலைநீந்தி—அப்பால்*
*பேரின்ப வீடடையவேண்டின்,*
*இறைவன் தனக்குவமை*
*இல்லான் எண்குணத்தானை (மறவா)*

# எங்கும் நிறைந்தவன்

**இராகம்—லலிதாங்கி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

கூறு தறிந்திடாயோ?—என்றன்
குறைகளனைத்தையும் நான்
உன்பால் எடுத்துக் (கூறு)

**அநுபல்லவி**

தேரு உலகமிதில்
சிந்தை கலங்கிக் கண்ணீர்
ஆருய் ஒழுகி ஓட
அழுது தொழுது நிதம் (கூறு)

**சரணம்**

வல்லார்க்கு வல்லவன் நீ!—தெய்வ
மறைகளுக் கரியவன் நீ!
நல்லார்க்கும் பொல்லார்க்கும்
நடுநின்ற நாயகன் நீ!
எல்லாம் அறிந்தவன நீ!
எங்கும் நிறைந்தவன் நீ! (கூறு)

# ஏக பரம் பொருள்

**இராகம்**—சங்கராபரணம் **தாளம்**—சாபு

**பல்லவி**

எப்பெயர் சொல்லி அழைப்பேன்!—
ஏழை எளியேன்
எங்குனைக் கண்டு தொழுவேன்!

**அநுபல்லவி**

அப்பனும் அம்மையுமாய்
அனைத்துலகையுமீன்ற
தற்பரமாம் பொருளே!
சமயாதீதப் பொருளே! (எப்பெயர்)

**சரணம்**

ஓடி ஓடி அலைந்தேன்
ஊர்பல சுற்றி வந்தேன்;
தேடித் தேடி நிதமும்
சிந்தை தளர்ந்து நின்றேன்;
பாடிப் பாடி இனியுன்
பதம்பெற ஆசை கொண்டேன்;
ஈடும் எடுப்பு மிலா
ஏக பரம் பொருளே! (எப்பெயர்)

காவியம் கற்றலுத்தேன்,
கதைகளும் கேட்டலுத்தேன் ;
மேவிய விதிமுறை
விரதங்கள் காத்தலுத்தேன் ;
பூவினைப் பெய்துபல
பூசைகள் செய்தலுத்தேன் ;
யாவுமாய் அல்லவுமாய்
இருந்த பரம்பொருளே ! (எப்பெயர்)

ஓதிய குருவிடம்
உபதேசம் பெற்றலுத்தேன் ;
போதனை செயவந்த
புராணம் படித்தலுத்தேன் ;
வாதுசெய் பண்டிதரின்
வழக்கையும் கேட்டலுத்தேன் ;
ஆதி அநாதியாகி
அமர்ந்த பரம்பொருளே ! (எப்பெயர்)

# இயற்கையில் ஈசன்

**இராகம்**—சாம　　　　**தாளம்**—ஆதி

**கண்ணிகள்**

பொன்னைச் சொரிந்து பொலிந்து மணம்பெறப்
　　பூத்தெழும் கொன்றையினை—மணம்பெறப்
　　பூத்தெழும் கொன்றையினை,

மின்னும் சடைமுடி அண்ண லென்றுள்ளம்
　　வியந்து தொழுது நிற்பேன்—உள்ளம்
　　வியந்து தொழுது நிற்பேன்.

வண்டு களங்கு மகிழ்ந்து முரன்று
　　வளைந்து சுழன்றுவரல்—முரன்று
　　வளைந்து சுழன்றுவரல்,

தொண்டர் திருமறை ஓதிவலம் செயும்
　　தோற்றம் தரு மெனக்கே—வலம்செயும்
　　தோற்றம் தரு மெனக்கே.

மன்னும் இயற்கையில் ஈசனைக் கண்டு
　　வணங்கும் மதியுடையோர்—கண்டு
　　வணங்கும் மதியுடையோர்,

பொன்னம்பலம் வெள்ளி யம்பலம் தேடிப்
　　புவியில் அலைகுவரோ ?—தேடிப்
　　புவியில் அலைகுவரோ ?

# முருகன்

**இராகம்—நாட** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*வந்தனை செய்வோ மே!—அனுதினம்*
*வாழ்த்தி வணங்கு வோமே!*

**அநுபல்லவி**

*கந்தனைச் சண்முகனைக்*
*கடம்பனைக் கவுரியின்*
*மைந்தனை மாயவன்*
*மருகனை முருகனை (வந்தனை)*

**சரணம்**

*கானும் மலையும் அவன்*
*கலக்கி எழுப்பிய ஓர்*
*மானைத் தொடர்ந்து வள்ளி*
*மனையிற் புகுந் தினிய*
*தேனும் தினையும் அவள்*
*சிரித்துச் சிரித் தளிக்க*
*வானமு தாக உண்டு*
*மகிழ்ந்த கதையைப் பாடி*

*(வந்தனை)*

# தெள்ளத் தெளிந்ததையா !

இராகம்—கமாஸ்　　　　　　　　தாளம்—கண்டசாப்பு

**பல்லவி**

தெள்ளத் தெளிந்த தையா!—உமது
கள்ளத் தனமெல்லாம்.

**அநுபல்லவி**

வள்ளிக் குறத்தியின்
　　மையலில் சிக்கிஞல்
எள்ளத் தனை அன்பும்
　　என்மீ திருக்குமோ ?　　(தெள்ளத்)

**சரணம்**

வேட்டைக் கெனஎழுவீர்!—கையில்
　　வேலையும் ஏந்திச் செல்வீர்!
காட்டினைச் சுற்றியக்
　　கள்ளியின் தினைப்புன
மேட்டுக்கே ஒருமானை
　　விரட்டிப் பின்ஓடுவீர்!　　(தெள்ளத்)

கட்டிச் சிறையிடுவார்—அந்தக்
　　காட்டுக் குறவரென்று
தட்டழிந் துள்ளம்
　　தடுமாறி யல்லவோ
வெட்டை வெளியிலோர்
　　வேங்கை மரமானீர்!　　(தெள்ளத்)

# மாமுருகா !

**இராகம்**—சுரடி **தாளம்**—ஆதி

### பல்லவி

உன்னிடத் தன்றிவே றேவரிடத்
தென்குறைகள்
உரைத்திடச் செல்வே னையா!

### அநுபல்லவி

பொன்னுலகத்தை மீட்டிப்
புரந்தர னுளவைத்த
பன்னிரு கரந்திகழ்
படைக்கல வீரா! (உன்னிடத்)

### சரணம்

அருணகிரிக்குச் செய்த
கருணைசெய் தடியேனை,
ஆட்கொள லாகாதா ?
தருணமிதுவே ஐயா!
தளர்ந்து நின்றேனையா!
வருணம் சிறந்ததோகை
மயிலேறி விளையாடும்
மாமுருகா! வள்ளி
மகிழ் மணவாளா! (உன்னிடத்)

## மாயன் மருகன்

**இராகம்—*தர்பார்*** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*ஐயா! நீ அருள் செய்யவேண்டும்—உன்றன்*
*அடியிணை யன்றிவே றொருதுணை அறியேன்.*

**அநுபல்லவி**

*ஒய்யார மாமயிலில்*
*உல்லாச மாகவரும்*
*வையா புரிமுருகா!*
*மாயன் திருமருகா!* *(ஐயா)*

**சரணம்**

*வஞ்ச வினைமலியும் உலகில்—வாழும்*
*வழியறி யாது நிதம் வருந்திடு மெளியேன்*
*அஞ்சிவந் துன்னையே*
*அடைக்கல மாய்ப்புகுந்தேன்,*
*அமரரைச் சிறைதவிர்த்*
*தாண்ட குமரா! என்* *(ஐயா)*

# மனத்துக்கு

**இராகம்**—பரசு **தாளம்**—ஆதி

## பல்லவி

வந்தனை செய் மனமே!—மலரடி
வாழ்த்தி வணங்கு மனமே!

## அநுபல்லவி

கந்தனைச் சண்முகனைக்
கடம்பணி வோனை உமை
மைந்தனைத் திருமகள்
மருகனை முருகனை (வந்தனை)

## சரணம்

சாத்திரம் படித்தோயாச்
சண்டை வளர்த்திடாமல்,
நாத்திகம் பேசிப்பொல்லா
நரகினுக் காளாகாமல்,
கார்த்திகேயா! சரணம்
காத்தருள் என்னையென்று
கீர்த்தி பெருகும்அவன்
கிருபையை வேண்டிநிதம் (வந்தனை)

# பாடிப் பணிவோம்

**இராகம்**—*சாம* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*பாடிப் பணிவோ மே!—பக்தியொடு*
*பாடிப் பணிவோ மே!*

**சரணம்**

*அஞ்செழுத்தான் பெற்ற*
*ஆறெழுத் தண்ணலைத்*
*தஞ்சமென் றோர்க்கருள்*
*சண்முக நாதனைப் (பாடிப்)*

*தந்திக் கிளையோனைச்*
*சங்கரன் மைந்தனைக்*
*கந்தனை வெற்றிக்*
*கலியுக மெய்யனைப் (பாடிப்)*

*புள்ளிமயி லேறும்*
*புண்ணிய மூர்த்தியை*
*வள்ளி மயிலுக்கு*
*வாய்த்த மணாளனைப் (பாடிப்)*

ஔவையும் நாணி
அகந்தை அகன்றிட
நவ்வற் கனியிட்ட
நாரத நண்பனைப் (பாடிப்)

குடமுனிக் கருள்
குகனை வேலனை
வடகு மரையில்*
வாழும் முருகனைப் (பாடிப்)

---

* வடகுமரை – சேலம் ஜில்லாவிலுள்ள ஒரு தலம்.

# முருகன் திருப்பதிகள்

**இராகம்—காபி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

பாடிப் பணிவோமே !—பக்தியொடு
பாடிப் பணிவோமே !

**கண்ணிகள்**

பாரகம் போற்றிப் பரவும் பரங்குன்றில்
தாரக மாகவே தங்கும் தயாளனைப் (பாடிப்)

இந்திரற் குற்ற இடரினைப் போக்கிய
செந்தில் முருகனை, தெய்வானை கேள்வனைப் (பாடிப்)

புள்ளி மயிலேறும் புண்ணிய மூர்த்தியை,
வள்ளி மணாளனை, வையா புரியானைப் (பாடிப்)

வீராதி வீரனை, விசாகப் பெருமானை,
ஈராறு கையனை, ஏரகத் தண்ணலைப் (பாடிப்)

காலைக் கதிரெனக் காணும் பழமுதிர்
சோலைக் குமரனைச் சூரசம் மாரனைப் (பாடிப்)

இன்றமிழ் வாணருக் கென்றும் அருள்வானை,
குன்றுதொ றுடும் குகனைக் குழகனைப் (பாடிப்)

சிங்க முகனுயிர் சிந்திய காலனை,
கங்கையின் மைந்தனைக் கதிர்காம வேலனைப் (பாடிப்)

# சேவற் கோடியோன்

**இராகம்—ஆரபி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*வந்தனை செய்வோமே!—அனுதினம்*
*வாழ்த்தி வணங்கு வோமே!*

**அநுபல்லவி**

*செந்தமிழ்த் தெய்வத்*
*திருப்புகழ் ஓதியே*
*சிந்தை மகிழ்ந்துநம்*
*சேவற் கொடியோனை (வந்தனை)*

**சரணம்**

*பயிலும் தென்றல் பரிமளித்திட*
*பயன்மரம்பல பழமுதிர்த்திட*
*மயில்கள் ஆடக் குயில்கள்பாட*
*வளரும் சோலை வடகுமரையில்*
*அயில்கை ஏந்தி அமரும் அழகா!*
*அடியர்க் கிரங்கி அருளும் குழகா!*
*ஜய ஜய ஜய சரவண பவா!*
*சரணம் சரணம் சரணமென்று*
*(வந்தனை)*

*

# முருகன் பவனி

**இராகம்—ஸ்ரீரஞ்சனி** **தாளம்—ரூபகம்**

**பல்லவி**

இருகண் போது மோடி! — தோழி!
இருகண் போது மோடி!

**அநுபல்லவி**

முருகன் பவனி வருமக் காட்சி
முழுதும் கண்டு தொழுது நிற்க (இருகண்)

**சரணம்**

மாயன் மருமகனைக் — கடம்ப
மாலை கமழ் மார்பனைத் — தோகை
மாமயில் வாகனனைக் — குகனை
வள்ளி மணவாளனைச் — செந்தில்
வாழும் வடிவேலனை

ஆயிரம் கண்களால் நோக்கினும் அன்பருக்
காசை தீராதெனில் அம்ம நமக்கிந்த
(இருகண்)

# இரங்கியருள்

**இராகம்—மணிரங்கு** **தாளம்—ஆதி**

**பல்லவி**

சித்தம் இரங்கி அருளையா ! — சற்றே
சித்தம் இரங்கி அருளையா !

**அநுபல்லவி**

நித்தமுன் திருக்கோவில்
நினைந்து தொழுது நின்றேன் ;
முத்தையனே ! செந்தில்
முருகனே ! சண்முகனே ! (சித்தம்)

**சரணம்**

மன்னராய்ப் பிறக்கவும் வேண்டாம் — அந்த
வானக வாழ்வும் பெறவேண்டாம் ;

உன்னடி நிழலிலே
ஒதுங்கிடச் சிறிதிடம்
என்னுயிருக் குதவ
எம்பெரு மானே நீ (சித்தம்)

## தாயினு மினிய தயாளன்

**இராகம்—கௌளை** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*ஆயிரம் பிழைசெய்தே னாயினும் பொறுத்தெனை*
*ஆட்கொள வேண்டு மையா!*

**அநுபல்லவி**

*தாயினு மினிய*
*தயாளனே ஒருதுணை*
*நீயலால் எனக்கிந்த*
*நீணிலத் தெங்குமுண்டோ?* (ஆயிரம்)

**சரணம்**

*பட்டம் பதவிகட்கும்*
*பணத்துக்கு மேயென்றும்*
*பாரினில் பாடு பட்டேன்—வீணாய்ப்*
*பாரினில் பாடுபட்டேன்,*

*சிட்டருடனே கூடித்*
*திருப்புகழ் பாடியுனை*
*இட்டகுல தெய்வமென்*
*றெண்ணிப் பணிந்தறியேன்,*

*தட்டழிந்திடு கீரன்*
*சாற்றிய தமிழ்க்கருள்*
*சண்முகனே! செந்தில்*
*சரவண பவனே!* (ஆயிரம்)

## என்ன செய்குவேன்?

**இராகம்—அடாணு** **தாளம்—ஆதி**

**பல்லவி**

ஏதும் அறியாரைப்போல்
இருந்திடில் எளியேன் நான்
என்ன செய்குவேன்! ஐயா!

**அநுபல்லவி**

ஆதி சிவன்மகன்நீ!
அகிலலோக நாயகன்நீ!
சோதி வடிவேலன்நீ!
சூரசம் மாரன்நீ! (ஏதும்)

**சரணம்**

பொய்யும் மெய் யுமேநிதம்
போரிடும் இப் புவியில்
புத்தி மயங்கி நின்றேன்,
செய்யும் பிழை பொறுத்துச்
சித்தம் இரங்கி யெனக்
குய்யும் வழிய ருளல்
உன் கடன் அல்லவோ? (ஏதும்)

ஆழியா பிறவிப பே -
ராழி, அலைகள் மோதும்
ஆழி, இதன் நடுவே
சூழும் புயலெ ழுந்து
சுற்றிச் சுழலும் வேளை,
ஏழை விடுங் கலத்துக்
கெவரும் துணைவே றுண்டோ? (ஏதும்)

# தேடித் தவிக்குதடி !

**இராகம்**—வகுளாபரணம் **தாளம்**—ஆதி

**பல்லவி**

தேடித் தவிக்கு தடி!—என் உள்ளம்
தேடித் தவிக்குதடி!

**அநுபல்லவி**

பாடி மகிழ்ந்திடப்
பக்கத் தமர்ந்திடக்
கூடி அளாவிக்
குலாவிட நித்தமும் (தேடித்)

**சரணம்**

அல்லாரும் கண்டர், பொன் -
அம்பலக் கூத்தர், கை
வில்லாக வேமேரு
வெற்பை எடுத்தவர்,
கல்லானை உண்ணக்
கரும்பைக் கொடுத்தவர்,
எல்லாம் வல்லசித்தர்,
என்மது ரேசரைத் (தேடித்)

கல்லைப் பிசைந்து
      கனியாக்க வல்லவர்,
புல்லையும் நெல்லெனப்
      போற்றிடும் நல்லவர்,
சொல்லைக் கடந்தவர்,
      சொற்பொரு ளானவர்,
எல்லையி லாதபே-
      ரின்பம் அளிப்போரைத் . .      (தேடித்)

# இன்னம் வந்தாரில்லையே!

**இராகம்**—*ஹிந்தோளம்* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*இன்னம் வந்தா ரில்லையே!—அறியாரோ ?*
*ஏழை படுந் தொல்லையே!*

**அநுபல்லவி**

*புன்னகை புரிந்துமுப்*
*புரங்க ளெரித்தவர்,*
*தென்னவர் நாடாளச்*
*செங்கோல் தரித்தவர் (இன்னம்)*

**சரணம்**

*செந்தமிழ்ப் பண்ணிலே*
*சிக்கிக் கிடக்கின்றாரோ ?*
*வந்தியின் பிட்டுக்கு*
*வழக்காடி நிற்கின்றாரோ ?*
*சுந்தரன் வேண்டிடத்*
*தூது நடக்கின்றாரோ ?*
*எந்தத் திசையேகி*
*என்ன செய்கின்றாரோ ? (இன்னம்)*

*

# இன்னம் வரக் காணேனே !

**இராகம்**—*கீரவாணி* **தாளம்**—*மிச்ரசாபு*

**பல்லவி**

*இன்னம் வரக் காணேனே!—இலவுகாத்து*
*ஏங்கும் கிளியா னேனே !*

**அநுபல்லவி**

*அன்னம் பயில் தில்லைப்*
*பொன்னம் பலத்தாரென்*
*தன்னந் தனிநிலை*
*சற்றும் அறியாரோ ?* *(இன்னம்)*

**சரணம்**

*புத்தரவம் போலவே—சீறிவாடை*
*புறப்படு கின்றதையோ!*
*சித்தசன் இரக்கமே*
*சிறிது மில்லாப்பாவி*
*அத்தனை அம்பையும்*
*அள்ளிச் சொரிகின்ருன்!* *(இன்னம்)*

# சூரியன் எழுந்து வந்திடானோ?

**இராகம்**—*பௌளி* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*இருளும் நீங்கிடாதோ?—சூரியனும்*
*எழுந்து வந்திடானோ?*

**கண்ணிகள்**

*ஆழி நெடுந் தேரும்—வழியில்*
*அச்சு முறிந்ததுவோ?*
*ஏழு குதிரைகளும்—ஒன்ருய்*
*இடறி வீழ்ந்தனவோ?* (இருளும்)

*அரவின் வாய்ப் பட்டே—அவனும்*
*அழிந்து போனானோ?*
*பரவையில் விழுந்து—மீளாப்*
*பாதலம் சேர்ந்தனனோ?* (இருளும்)

*ஏற வொட்டாதபடி—விந்தம்*
*எழுந்து நின்றதுவோ?*
*வேறு வழியாகச்—சென்று*
*மேற்கில் அடைந்தனனோ?* (இருளும்)

*கோழி கூவிடாதோ?—காகமும்*
*கூட்டில் மடிந்ததுவோ?*
*தோழி இரவிதுதான்—யுகமாய்த்*
*தொடர்ந்து நீண்டிடுமோ?* (இருளும்)

வீசும் தென்றலினால்—உடலும்
 வெந்து கருகுதடி!
பூசிய சந்தனமும்—தூளாய்ப்
 பொரிந்து போகுதடி! (இருளும்)

இன்று வருவாரோ?—அவர்தான்
 இன்னும் சில நாட்கள்
சென்று வருவாரோ?—தோழி!
 தெரிந்து சொல்லாயோடி! (இருளும்)

# என்று வருவாரோடி ?

**இராகம்**—*காமவர்த்தினி* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*என்று வருவா ரோடி?—என்மீ*
*திரக்கமும் கொள்ளா ரோடி?*

**அநுபல்லவி**

*இன்று வருவாரோ?*
*நாளை வருவாரோ?*
*இன்னும் ஒருவாரம்*
*நின்று வருவாரோ?* *(என்று)*

**சரணம்**

*மன்றில் நடமாடும்— அந்த*
*வள்ளலிடம் தூது*
*சென்ற கிளி எங்கே*
*சென்றதோ? யானிங்கே*
*தீயில் விழுந்த*
*புழுவாய்த் துடிக்கின்றேன்!* *(என்று)*

*

## தில்லையப்பன்

**இராகம்—கரஹரப்ரியா** **தாளம்—ஆதி**

**பல்லவி**

சொன்ன தெல்லாம் மறந்தாரோ?—என்னைச்
சோதனை செய்யத் துணிந்தாரோ?

**அநுபல்லவி**

செந்நெற் கழனி சூழும்
தில்லைப் பதியார் அன்று
கன்னம் குழிய முத்தம்
கனிந்து கனிந் தளித்துச் (சொன்ன)

**சரணம்**

வருவார் வருவார் என்று நித்தம்—வரும்
வழிமேல் விழியாய் நின்றேன், தோழி!
ஒருவாரம் ஒருமாதம்
ஒருவருஷமும் போச்சே,
ஒருத்தி கிறுக்கிஎன்றிவ்
வூரும்சிரிக்க லாச்சே (சொன்ன)

## நல்ல சகுனம்

**இராகம்**—ஷண்முகப்ரியா **தாளம்**—ஆதி

**பல்லவி**

நல்ல சகுனம் நோக்கிச் செல்லடி!—சென்று
நான்படும் பாடவர்க்குச் சொல்லடி!

**அநுபல்லவி**

அல்லல் அகற்றி அன்பர்க்
கானந்தம் அருள் நேசர்,
தில்லைப் பதி நடேசர்
திருவுள்ளம் அறிய நீ! (நல்ல)

**சரணம்**

வண்ணமலர்க ளேதும்
வாசம் தருவதில்லை;
பண்ணில் இனிமையில்லை,
பாலிற் சுவையுமில்லை;
கண்ணில் உறக்கமில்லை,
கருத்தோர் நிலையிலில்லை;
எண்ணி அளப்பதேனோ?
எல்லாம் அறிவாயோடி?
புண்ணியம் உண்டடி,
பொற்றொடியே! இன்று (நல்ல)

# யாரிவன் அறிவாயோடி ?

**இராகம்**—*கல்யாணி* **தாளம்**—*மிச்ரசாபு*

**பல்லவி**

*யாரிவன் அறிவா யோடி ? — இவனிடத்தில்*
*என்ன உறவுனக் கடி ?*

**அநுபல்லவி**

*ஊருண்டோ ? பேருண்டோ ?*
*உற்றூர் பெற்ரு ருண்டோ ?*
*சீருண்டோ ? சிறப்புண்டோ ?*
*தெரிந்தா ரெவரு முண்டோ ?* (யாரிவன்)

**சரணம்**

*பிச்சை யெடுத் தலைகின்ருன் — சுடலையிலே*
*பேயுடன் ஆடுகின்ருன்,*
*நச்சரவைக் கழுத்தில் — தொங்கவிட்டு*
*நல்லணி பூணுகின்ருன் ;*
*அச்சம் தரும் புலித்தோல்*
*ஆடையாய் உடுக்கின்ருன்,*
*இச்ச கத்தில் பித்தன்*
*இவனைப்போல் எங்குமுண்டோ ?*
(யாரிவன்)

# உன்னாலே என்ன ஆகும்?

**இராகம்**—*அஸாவேரி* **தாளம்**—*மிச்ரசாபு*

**பல்லவி**

*உன்னாலே என்ன ஆகும்? — ஏழை மனிதா!*
*உன்னாலே என்ன ஆகும்?*

**அநுபல்லவி**

*நன்றாறிற் பூட்டியொரு*
*நாயகன் ஆட்டி யல்லால்,*
*தன்னாலே ஆடும் பாவை*
*தரணியில் எங்கு முண்டோ? (உன்னா)*

**சரணம்**

*எல்லாம் இயற்றுதற்கு*
*வல்லான்எம் மறைக்குமே*
*சொல்லால் அளவறுத்துச்*
*சொல்லற் கரியபிரான்,*
*நல்லார்க்கும் பொல்லார்க்கும்*
*நடுநின்று நட்ஞ்செயும்*
*அல்லாரும் கண்டனவன்*
*அருளைப் பெருதிருந்தால் (உன்னா)*

# வெல்ல முடியாதோ?

**இராகம்—அடாணு** **தாளம்—ஆதி**

**பல்லவி**

வெல்ல முடியா தோ? — விதியையும்
வெல்ல முடியா தோ?

**அநுபல்லவி**

அல்லும் பகலும் நின்
றுனந்தக் கூத்தாடும்
தில்லைப் பெருமான்
திருவருள் உண்டானல் (வெல்ல)

**சரணம்**

காலனைக் காலாலே உதைத்தவன்,
காய்ந்து புரமெரித்தோன்;
ஆலமுண்ட கண்டன்
அம்மை உமைபங்கன்
அம்புஜ பாதமே
நம்பும் அடியார்க்கு (வெல்ல)

# கண்ணாரக் காணும் ஸ்வர்க்கம்

**இராகம்**—*தன்யாஸி* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*கண்ணாரக் கண்டு மகிழ் — ஸ்வர்க்கம்*
*கனக சபையல்ல வோ ?*

**அநுபல்லவி**

*தண்ணார் மதிசூடும்*
*சாம்ப சதாசிவன்*
*பெண்ணாளும் பாகன்*
*பெருமான் அடியவர்* *(கண்)*

**சரணம்**

*பாடிப் புகழ்ந்து நிதம் — நடராஜன்*
*பாதம் பணிந்திடாமல்,*
*ஓடி உலகெங்கும்*
*ஊரூராய்ச் சுற்றி நீ*
*வாடி வருந்தி*
*மலைவதேன் நெஞ்சமே !* *(கண்)*

# நல்ல உபதேசம்

**இராகம்—செஞ்சுருட்டி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

நல்லது சொல்லுகின்றேன் மனமே!—இதையெந்
நாளும் நீ நம்புவா யென் மனமே!

**கண்ணிகள்**

தில்லைப் பதிக்குச் செல்லவேணும்—சென்று
சிற்றம்பலம் சுற்றவேணும்;
அல்லும் பகலும் அதில் ஆடும்—ஈசன்
ஆனந்த நடம் காணவேணும் (நல்லது)

பைந்தமிழ்ச் சோலையிலே புகுந்து—நல்ல
பரிமளம் வீசும் மலர் பறித்துச்
சந்தமெழ மாலை கட்டி—அவன்
தாளில் அணிந்து தொழவேணும் (நல்லது)

கன்றுக் கிரங்கும் பசுப்போல—அவன்
கனிந்தருள் செய்திடுவான் மனமே!
என்றும் அவன் துணையுண்டானால்—நமக்
கேதும் கவலையில்லை மனமே! (நல்லது)

பாவம் பறந்தோடிப் போகும்—பெரும்
பாக்கியம் வந்து நம்மைச் சேரும்;
தேவர் முனிவருமே காணா—அந்தச்
சிவலோக வாழ்வும் நமக்கெய்தும் (நல்லது)

## வாடி நீ வருந்துவதேன்?

**இராகம்—ஸஹாநு** **தாளம்—ஆதி**

**பல்லவி**

வாடி நீ வருந்துவ தேன்?—மனமே!
வாடி நீ வருந்துவ தேன்?

**அநுபல்லவி**

வீடும் குடியுமில்லை,
விளைநிலம் ஏதுமில்லை;
தேடி அடையவழி
தெரியவும் இல்லையென்று (வாடி)

**சரணம்**

ஈக்கள் எறும்புகளை
எண்ணிலா உயிர்களைக்
காக்கும் கருணைகரன்
கனகசபை நடேசன்
ஆக்கம் பெருகஉனக்
கருள்செய்யா திருப்பானோ?
பாக்களில் அவன்புகழ்
பாடிப் பணிந்திடாமல் (வாடி)

அஞ்சிய வானவருக்
கரிய அமுதளித்து,
நஞ்சினையுண்ட ஈசன்
நமக்கருள் செய்திடாதோ?
குஞ்சித பாதமலர்
கும்பிட் டெனக்குநீயே
தஞ்சமென அவனைத்
தாழ்ந்து பணிந்திடாமல் (வாடி)

# பாடிப் பரவு

**இராகம்**—*பியாக்* **தாளம்**—*ஆதி*

**பல்லவி**

*பாடிப் பரவு நெஞ்சே!—பக்தியொடு*
*பாடிப் பரவு நெஞ்சே!*

**கண்ணிகள்**

*தேடும் அடியவர் சிந்தை மகிழ்ந்திட*
*ஆடும் திருத்தில்லை அம்பல வாணனைப் (பாடிப்)*

*வாதவூரர் சொன்ன வாசகம் தீட்டிய*
*வேதப் பரியானை விடமுண்ட கண்டனைப் (பாடிப்)*

*பைந்தமிழ் கேட்டுப் பரிசு வழங்கிடும்*
*கொந்தலர் கொன்றை குலவு சடையானைப்*
*(பாடிப்)*

*வேலையில் கல்தூண் மிதந்திடப் பாடிய*
*சீலனைக் காத்த சிவலோக நாதனைப் (பாடிப்)*

*இந்திரற் குற்ற இடரை ஒழித்தானை*
*சுந்தரர் தூதனைச் சோதி சொரூபனைப் (பாடிப்)*

*

# மலையாதே

**இராகம்**—நாதநாமக்ரிய **தாளம்**—ஆதி

**பல்லவி**

மலையா திருப்பாயென் மனமே!—சற்றும்
மலையா திருப்பாயென் மனமே!

**அநுபல்லவி**

அலையாழி புரளாமல்
அண்டங்கள் சிதறாமல்
நிலையாய் நிறுத்தும் ஈசன்
நின்னைக் கை விடுவானோ? (மலையா)

**சரணம்**

தடுத்தாளும் பெருமானைச்
சங்கரனைப் புலித்தோல்
உடுத்தாளும் திருத்தில்லை
உமை யொரு பாகனை நீ
அடுத்தாள வேண்டி நிதம்
அடிபணிந் திடில் அவன்
எடுத்தாளத் திருவுள்ளம்
இரங்கிட மாட்டானோ? (மலையா)

# அஞ்சாதே

இராகம்—பைரவி

தாளம்—ஆதி

### பல்லவி

அஞ்சா திருப்பாயென் மனமே!—எமனையும்
அஞ்சா திருப்பாயென் மனமே!

### அநுபல்லவி

பஞ்சா க்ஷரம் நினைந்து
பால்வெண் ணீறும் பூசி (அஞ்சா)

### சரணம்

தீரா வினைகளெல்லாம் தீரும்—திருக்கயிலைத்
தேவாதி தேவனருள் சேரும்;
பேரானந்தம் பெருகும்,
பிறவிப் பிணியகலும்,
ஆராவ முதனைய
அருந்தமிழ் மறை ஓதி (அஞ்சா)

# அறிகிலேன்

**இராகம்**—பூர்விகல்யாணி **தாளம்**—ஆதி

**பல்லவி**

என்ன செய்வேனையா !—இனி நான்
எப்படி உய்வேனையா !

**அநுபல்லவி**

உன்னருளன்றி
ஒரு துணை வேறில்லை,
என்னப்பனே ! விடை
ஏறும் பெருமானே ! (என்ன)

**சரணம்**

அன்ன விசாரம்
அதுவே விசாரமாய்,
மன்னும் உலகிலென்
வாணாளைப் போக்கினேன் ;
இன்னும் பல பிறப்
பெய்தி வருந்தாமல்,
பொன்னம் பலத்துன்னைப்
போற்றி அறிகிலேன் (என்ன)

# சாந்தி பெறுவேனோ ?

**இராகம்**—ஸிம்மேந்திர மத்யமம் **தாளம்**—ரூபகம்

**பல்லவி**

பாதை யறியாமல்—நின்று
பரதவிக் கின்றேன் ஏழை

**அநுபல்லவி**

வாதும் பொறாமையும்
வஞ்சமும் சூதுமே
வேதனை செய்யுமிவ்
வெய்ய வனந்தனில் (பாதை)

**சரணம்**

திங்களும் கங்கையும்
சென்னியிற் சூடிய
மங்கையோர் பாகனே !
வானோர் பெருமானே !
எங்குனைக் காண்பேனோ ?
என்றுன் பத நிழல்
தங்கியிருந்துப
சாந்தி பெறுவேனோ ? (பாதை)

## குற்றம் பொறுத்தருள்

**இராகம்**—*மாயாமாளவ கௌள* **தாளம்**—*மிச்ரசாபு*

**பல்லவி**

*குற்றம் பொறுத்தருளையா !—உன்னை நிதம்*
*கும்பிடுகின்றேனையா !*

**அநுபல்லவி**

*கற்றைச் சடைசுழலக்*
*கங்கை கறங்கத் தில்லைச்*
*சிற்றம் பலத்தில் ஆடும்*
*தேவாதி தேவா ! என் (குற்றம்)*

**சரணம்**

*பொய்யை மெய்யாக எண்ணிப்*
*புவன வலையில் சிக்கி,*
*உய்யும் வழியறியா*
*துள்ளம் கலங்கி நின்றேன் ;*
*ஐயநின் பாத மல்லால்,*
*ஆந்துணை வேறுண்டோ ?*
*தையலோர் பாகம் கொண்ட*
*தரும குணையா ! என் (குற்றம்)*

## அஞ்சி வந்தேன்

**இராகம்**—தோடி **தாளம்—ஆதி**

**பல்லவி**

அஞ்சி வந்தே னையா !—என்னை
ஆள வேண்டு மையா !

**அநுபல்லவி**

தஞ்சம் வேறில்லைச்—சுசிந்தைத்
தாணு மாலயா ! (அஞ்சி)

**சரணம்**

பண்டனசூயை—மகவாய்ப்
பாலமுத முண்டோய் !
மண்டலம் புகழும்—ஞான
வனத்தில் வாழ் மணியே ! (அஞ்சி)
அருளைத் தேடாமல்—உன்றன்
அடிமை யாகாமல்,
பொருளைத் தேடிநின்றேன்—வீணைப்
பொழுதைப் போக்கிவிட்டேன் (அஞ்சி)
செய்பிழை யெல்லாம்—எண்ணிச்
சிந்தை தளர்கின்றேன் ;
உய்வழி காணுமல்—இந்த
உலகில் வாடுகின்றேன் (அஞ்சி)

தொண்டரைப்போல—இன்று
தொழுது நிற்கின்றேன்;
கண்டிரங்குவையோ?—என்னைக்
கடிந்த கற்றுவையோ? (அஞ்சி)
பாவம் நீங்கிடவே—கடைக்கண்
பார்த்தருளையா!
தேவர் கோன்பணியும்—ஈசா!
சிவகாமி நேசா! (அஞ்சி)

# கதிரைக் காண்பதெப்போ?

**இராகம்—நாதநாமக்ரிய** **தாளம்—திச்ர ஏகம்**

**பல்லவி**

*களை பறிப்ப தெப்போ?—கண்ணில்*
*கதிரைக் காண்ப தெப்போ?*

**அநுபல்லவி**

*விளைநில முழுதும்—அடர்ந்து*
*மீறிமே லோங்கும்* *(களைபறிப்)*

**சரணம்**

*உள்ள உரத்தையெல்லாம்—ஊரை**
*உறிஞ்சு கின்றதையோ!*
*கொள்ள உணவின்றிப்—பயிரும்*
*குறுகிப் போகுதையோ!* *(களைபறிப்)*
*குறுகும் பயிரினைக்—காணில்*
*கும்பி எரியுதையோ!*
*அறு கணிந்தவனே!—சிவனே!*
*ஆதி பராபரனே!* *(களைபறிப்)*

---

***ஊரை – ஒருவகை வால்நெல்.**

*

# வேறு அறியேன்

**இராகம்**—சுத்ததன்யாஸி　　　　**தாளம்**—ஆதி

**பல்லவி**

திருவடி தொழுது நின்றேன்—ஜன்மமீடேறச்
செயலெதும் வேறறியேன்

**அநுபல்லவி**

குருவடி வாகவந்து
　　குருந்த மரத்தடியில்
அரிய நல்லுபதேசம்
　　அடியர்க் களித்த ஈசா　　　　(திருவடி)

**சரணம்**

வேத புராண மெலாம்—ஓதிட
　　விதியும் மதியும் இல்லேன்,
மாதவம் செய்திடவும்—உடலிதில்
　　வலிமை சிறிது மில்லேன்;
தீதறு திருப்பதிகள்—புண்ணிய
　　தீர்த்தங்கள் யாவுமே யுன்
பாத பங்கஜ மெனவே—நம்பிப்
　　பக்தியொடனு தினமும்　　　　(திருவடி)

# பாதாரவிந்தம் பணிந்தேன்

**இராகம்**—காம்போதி **தாளம்—ஆதி**

**பல்லவி**

பாதார விந்தம் பணிந்தேன்—கடைக்கண் நீ
பாலிக்க வேண்டு மையா!

**அநுபல்லவி**

சாதாரி* ப்பாடி வெற்றி
தமிழிசைக் கேயளித்த
நாதா! லீலாவி நோதா!
நங்கை உமையாள் பங்கா! (பாதார)

**சரணம்**

புத்தகக் காடு முழுதும்—அலைந்தலைந்தென்
பொழுதெலாம் போக்கி விட்டேன்,
சித்தம் மயங்கி உண்மை
தெளியாது திகைப்புற்றேன்,
பத்தர்க் கருளும் ஈசா!
பாபவி நாசா! உன் (பாதார)

---

* திருவிளையாடற் புராணம் விறகுவிற்ற படலம் நோக்குக.

# கும்பிடுகின்றேன்

**இராகம்**—நாட்டக்குரஞ்சி **தாளம்**—ஆதி

**பல்லவி**

கும்பிடு கின்றேனையா!—அனுதினமும்
கும்பிடு கின்றேனையா !

**அநுபல்லவி**

உம்பரும் முனிவரும்
ஒரு வருமே அறியா
எம்பெருமானே ! தில்லை
அம்பல வாணனே ! (கும்பிடு)

**சரணம்**

கல்லா லெறிந்த வற்கும்
காலால் மிதித்த வற்கும்
வில்லா லடித்த வற்கும்
விரும்பி அருள் சுரந்த
நல்லானே ! சிவகாமி
நாதனே ! என் பிழைகள்
எல்லாம் நீ பொறுத்துள்ளம்
இரங்கிட இரந்துன்னைக் (கும்பிடு)

# சிந்தனை செய்வோம்

**இராகம்—உசேனி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*சிந்தனை செய்வோமே!—தினந்தினம்*
*சிந்தனை செய்வோமே!*

**கண்ணிகள்**

*செஞ்சடை யீசனை*
*சிற்றம் பலத்தானை,*
*நஞ்சுண்ட கண்டனை*
*நாகா பரணனைச் (சிந்)*

*கல்லானை உண்ணக்*
*கரும்பை அளித்தானை,*
*வில்லாக வேமேரு*
*வெற்பை வளைத்தானைச் (சிந்)*

*பார்த்தன்கை வில்லினால்*
*பண்டடி பட்டோனை,*
*ஆத்தி மலர்சூடும்*
*அம்பிகை பாகனைச் (சிந்)*

*கண்ணப்பன் பூசைகொள்*
*காளத்தி நாதனை,*
*உண்ணப் பலிதேடி*
*ஊரூர் அலைவானைச் (சிந்)*

கற்புணை யாகக்
கடலைக் கடந்தவன்
அற்புதப் பாடல்கேட்
டானந்தம் கொள்வோனைச் (சிந்)

வையம் புகழ்திரு
வாசகம் தீட்டித்தன்
கையெழுத் திட்ட
கனக சபையானைச் (சிந்)

பிட்டுக் குழைத்தானை,
பித்தனை, நந்தியின்
கொட்டுக் கிசையவே
கூத்தாடும் ஐயனைச் (சிந்)

காலன் கலங்கிடக்
காலால் உதைத்தானை,
ஆலமர் செல்வனை
ஆனே றுடையானைச் (சிந்)

நம்பும் அடியார்க்கெந்
நாளும் அருள்வானை,
உம்பர் பெருமானை
ஊர்பேரொன் றில்லானைச் (சிந்)

# கண்டு தொழவேண்டும்

**இராகம்**—காம்போதி **தாளம்**—ஆதி

**பல்லவி**

கண்டு தொழ வேண்டும்!—தில்லையில்
கண்டு தொழ வேண்டும்!

**அநுபல்லவி**

அண்டங்க ளெல்லாம்
அதிரநின் ருடிய
கண்டங் கரியானைக்
கண்மூன் றுடையானைக் (கண்டு)

**சரணம்**

பக்தி பெருகிடவே—கொடிய
பாபம் கருகிடவே,
புத்தி சிறந்திடப்
புண்ணியம் சேர்ந்திடச்
சத்தி வளர்ந்திடத்
தாண்டவ ராயனைக் (கண்டு)

# ஆறணி வேணியன்

**இராகம்—ஹம்ஸநாதம்** **தாளம்—ஆதி**

**பல்லவி**

வேறெதும் வேண்டேனே!—கும்பிட்டு
வேறெதும் வேண்டேனே!

**அநுபல்லவி**

நீறணி மேனியன்
நீலகண்டன் கங்கை
ஆறணி வேணியன்
ஆனந்தனைக் காணில் (வேறெ)

**சரணம்**

பூசை புரிந்திடவே—அவன்பதம்
போற்றிப் புகழ்ந்திடவே,
ஆசைக் கடலைப்
பெருக்கிட வேண்டுவேன்,
ஆயுளும் கோடி
அதற்காக வேண்டுவேன் (வேறெ)

## ஆதிரை அண்ணல்

**இராகம்—**மத்யமாவதி **தாளம்—**ஆதி

**பல்லவி**

*திருநாமம் பாடி வாழ்த்துவோம்!—தினம்தினம்*
*திருநாமம் பாடி வாழ்த்துவோம்!*

**அநுபல்லவி**

*ஒருநாமம் ஒருருவம்*
*ஒன்று மில்லாற் காயிரம்* (திரு)

**சரணம்**

*ஆதிரை அண்ணல் வாழ்க!*
*அம்பலக் கூத்தன் வாழ்க!*
*வேத முதல்வன் வாழ்க!*
*விண்ணோர் பெருமான் வாழ்க!*
*சோதி சொரூபன் வாழ்க!*
*சுந்தரர் தூதன் வாழ்க!*
*சீத மதிபு னையும்*
*சிவன் வாழ்க! வாழ்க! என்று* (திரு)

*அஞ்செழுத் தையன் வாழ்க!*
*அடியார்க் கெளியன் வாழ்க!*
*நஞ்சுண்ட கண்டன் வாழ்க!*
*நாதவி நோதன் வாழ்க!*

குஞ்சித பாதன் வாழ்க!
கோதில்முக் கண்ணன் வாழ்க!
தஞ்சமென் றவர்க் கருள்
சங்கரன் வாழ்க! என்று! (திரு)

மங்கையோர் பாகன் வாழ்க!
மான்மழு வேந்தி வாழ்க!
கங்கை யணிந்தோன் வாழ்க!
காலனைக் காய்ந்தோன் வாழ்க!
சங்கக் குழையோன் வாழ்க!
தந்தைதாய் இல்லான் வாழ்க!
அங்கையில் அன லேந்தும்
அரன் வாழ்க! வாழ்க! என்று (திரு)

# அரங்கன்

**இராகம்—ஸஹாநு** **தாளம்—ஆதி**

**பல்லவி**

இரங்கா திருக்க லாமோ!—திருவுள்ளம்
இரங்கா திருக்க லாமோ?

**அநுபல்லவி**

அரங்கா! முகுந்தா! என்
ஐயா! கோவிந்தா! நீ! (இரங்)

**சரணம்**

செல்லும் வழியறியேன்
சேரும் இடமறியேன்;
நல்ல துணையுமில்லை
நடக்க வலியுமில்லை;
கல்லும் முள்ளுமடர்ந்த
காட்டி லகப்பட்டுநான்
அல்லும் பகலுமுன்றன்
அருளையே நோக்கிநின்றேன் (இரங்)

# ஊதுவதாரடியோ ?

**இராகம்**—புன்னுகவராளி **தாளம்**—**ஆதி**

**பல்லவி**

ஊதுவ தாரடியோ ?—ப்ருந்தாவனத்
தூதுவ தாரடியோ ?

**அநுபல்லவி**

காதிலும் என்றன்
கருத்திலு மானந்தம்
கங்கு கரையின்றிப்
பொங்கிடவே குழல் (ஊது)

**சரணம்**

அன்னமும் தேவையில்லை—பிறிதொன்றில்
ஆசையும் செல்வதில்லை;
என்னையும் என்னுளந்
தன்னையு மேயிந்த
இன்னிசை பற்றி
இழுக்குதடி தோழி ! (ஊது)

*

# கடைக்கண் பாராயோ?

**இராகம்—கமாஸ்** **தாளம்—ரூபகம்**

**பல்லவி**

கடைக்கண் பாராயோ?—உள்ளம்
கனிந் தருளாயோ?

**அநுபல்லவி**

அடைக்கலம் புகுந்தேன்—துணைவே
றுருமில்லை ஐயா! (கடைக்)

**சரணம்**

பத்தரோ டுன்னை—நிதமும்
பணிந்து போற்றுமல்,
புத்தகக் காட்டில்—அலைந்து
பொழுதைப் போக்கிவிட்டேன் (கடைக்)

வாசத் துளவத்தின்—மகிமை
மனதிலோ ராமல்,
காசு பணத்தையே—எண்ணிக்
காலம் போக்கிவிட்டேன் (கடைக்)

முற்று மன்பாலே—திருவாய்
மொழியை ஓதாமல்,
வெற்று ரையாடி—நாளை
வீணைப் போக்கிவிட்டேன் (கடைக்)

எட்டெழுத்தை நெஞ்சில்—அன்போ
டெழுதி வையாமல்,
பட்ட மன்னவரின்—கதைகள்
பாடம்பண்ணி நின்றேன் (கடைக்)

மன்னர் சபையிலே—நின்று
மறுகி ஓலமிட்ட
அன்னை பாஞ்சாலிக்கு—அபயம்
அளித்த மாமுகிலே ! (கடைக்)

ஆதி மூலமே !—எனுமுன்
ஆனைமுன் வந்த
நாத நாரணா !—பதும
நாப ! கோவிந்தா ! (கடைக்)

வேத நாயகா !—முகுந்தா !
வேணு கோபாலா !
மாதவா ! க்ருஷ்ணா !—திருவாழ்
மார்பா ! கேசவா ! (கடைக்)

## தயங்கேன்

இராகம்—தன்யாஸி தாளம்—ஆதி

### பல்லவி

எத்தனை ஜன்மம் எடுக்கவும் ஏழைநான்
ஏதும் தயங்கேனையா !—ஐயா !
ஏதும் தயங்கேனையா !

### அநுபல்லவி

பக்தியோ டுன்பாதம்
பாடிப் பணிந்திடும்
பாக்கியம் வாய்க்கு
மெனில்—இன்னும் (எத்)

### சரணம்

ஆகாத குணமென்னை அண்டாமல் அணுகாமல்
ஆட்சி புரிந்திடாமல்,
நீகாவ லாய்வந்தென் நெஞ்சகத் தவிசேறி
நித்தமுந் தங்கி யங்கே
ஏகாதி பதியாக அரசாள என்மீ
திரங்கி அருள்வா யெனில்,
நாகாதி பன்தாங்கு நாராயணா ! ரங்க
நாதா ! கருணைகரா !—இன்னும் (எத்)

*

## சரத் காலம்

**இராகம்**—நவரஸக்கன்னட **தாளம்**—ஆதி

**பல்லவி**

அற்புதக் காட்சி ஈதையா!—கண்ணுக்கு
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் ஐயா!

**சரணம்**

பொன்னிறம் காணுதே ஐயா!—ஒளி
பொங்கு மரகதம் மின்னுதே ஐயா!
செந்நெற் கழனியோ ஐயா!—இது
செல்வத் திருவாழ் அரங்கமோ ஐயா! (அற்)

மேகம் படருது பாராய்—அதை
வேட்டை யாடிச்சுட ரோட்டுது பாராய்!
ஏக மயமாக வேதான்—உலகு
எங்கும் பரந்தொளி வீசுது பாராய்! (அற்)

செங்கதிர் செய்யும் விழவில்—மலர்த்
தேனையும் உண்ணு தலையுதே வண்டு;
தங்கு குளக்கரைத் தாரா—சுற்றித்
தன்னை மறந்து முழங்குதே ஐயா! (அற்)

# சரத்கால விழா

**இராகம்—பிலஹரி** | **தாளம்—திச்ர ஏகம்**

நீலவான் முகட்டை முட்டித்
தாக்கிடு வோமே—இந்த
நீண்டவெளி தன்னைச் சுற்றிக்
கொள்ளை கொள்வோமே;
வேலையின்று காலை செய்ய
வேண்டாம் வேண்டாமே—இனி
வீட்டினுக்கும் போக வேண்டாம்,
போக வேண்டாமே.

பொங்கியெழு வெள்ள மீது
தங்கு நுரைபோல்—எங்கும்
புஞ்சிரிப் பெழுந்துகளி
விஞ்சு தேஐயா!
இங்கு நாமும் ஓடிவிளை
யாடிடு வோமே—நல்ல
இன்னிசைகள் பாடிப்பாடி
இன்புறு வோமே.

*

## மோகினி

**இராகம்—ஆனந்த பைரவி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

புத்தி தடுமாறுதே யடா !—இவளொரு
பூலோக ரம்பையே யடா !

**அநுபல்லவி**

சித்திரத்தில் கண்டதில்லை
சிற்பச் சிலையிலில்லை,
புத்தகத்தும் இவ்வழகைப்
புலவர் புனைந்ததில்லை (புத்தி)

**சரணம்**

மங்கையர் மாணிக்கமிவளை—மணந்திட
மாதவம் செய்தாரு மெவரோ ?
தங்கவடி வழகி
தரள நகையழகி
திங்கள் முகத்தழகி
செகத்திலிவள் போலுண்டோ ? (புத்தி)

*

# கல்விச் சாலை

**இராகம்—ரீதி கௌள** **தாளம்—ஆதி**

**பல்லவி**

திருவடி தொழுகின்றோம்—அன்பொடு
திருவடி தொழுகின்றோம்

**அநுபல்லவி**

குருவடி வாக நின்று
குறையெலாம் போக்கி நலம்
அருள்செய வேண்டும் எங்கள்
ஆண்டவனே! உன்றன் (திருவடி)

**சரணம்**

தருமம் தழைத்திடவே
சத்தியம் ஓங்கிடவே,
பருவ மழை பொழிந்து
பயிர்கள் செழித்திடவே,
திருவளர் கலையெல்லாம்
தினமும் வளர்ந்திடவே,
அருள்வழி போற்றி மக்கள்
அனைவரும் வாழ்ந்திடவே (திருவடி)

புத்தி சிறந்திடவே
புலமை நிரம்பிடவே,
சத்தி பெருகிடவே
சற்குணம் வாய்ந்திடவே,
உத்தம ராகி நாங்கள்
உலகில் உழைத்திடவே,
நித்தமிக் கல்விச்சாலை
நிலைத்து விளங்கிடவே (திருவடி)

# ஆதிப் பொதுமறை

**இராகம்**—சக்கரவாகம் **தாளம்**—ஆதி

**பல்லவி**

ஆதிப் பொது மறையை—அனுதினம்
ஓதிப் பழகு வமே

**அநுபல்லவி**

ஜாதி மதபேதம் ஏதுமிலாநடு
நீதியை எங்கும் நிலை நிறுத்தவந்த (ஆதிப்)

**சரணம்**

தெய்வப் பெரும் புலவன்—தமிழ் நிலம்
செய்தவத் தால்பிறந்தோன்;
ஐயந் திரிபற உண்மை அறிந்தவன்
வையம் புகழ்திரு வள்ளுவன் பாடிய
(ஆதிப்)

பள்ளிச் சிறுவரொடு—சிறுமியர்
பண்டிதர் பாமரரும்,
உள்ளக் களிப்புடன்
ஒன்ருகக் கூடியே
தெள்ளத் தெளிந்த
குரலில் தெருவெல்லாம் (ஆதிப்)

# ஆறுமுக நாவலர்

**இராகம்—**மோகனம் **தாளம்—ஆதி**

**பல்லவி**

எல்லாரும் பாடிப் புகழ்வோம்—இன்று நாம்
எல்லாரும் பாடிப் புகழ்வோம்

**அநுபல்லவி**

அல்லாரும் கண்டன்திரு
அடியிணை மறவாத
நல்லானை ஆறுமுக
நாவலர் பெருமானை (எல்லாரும்)

**சரணம்**

ஐயம் திரிபகலவே—நூல்களை
ஆராய்ந் தளித்தெமக்கு
செய்ய நெறிவகுத்த
செந்தமிழ்ச் செல்வனை
சைவப் பயிர் வளர்த்த
சற்குரு நாதனை (எல்லாரும்)

# பாரதி மண்டபம்

**இராகம்**—*வஸந்தா* **தாளம்—ஆதி**

**பல்லவி**

*மண்டபம் வாழ்கவே!—பாரதி*
*மண்டபம் வாழ்கவே!*

**அநுபல்லவி**

*தண்டமிழ் போல அவன்*
*தந்த கவிகள் போல,*
*எண்டிசையும் போற்றும்*
*இமய மலையே போல* *(மண்டபம்)*

**சரணம்**

*பாரத சக்திவளர்—பீடமாய்*
*பைந்தமிழ்க் காலயமாய்,*
*வீர சுதந்திரத்தின்*
*வெற்றி நிலைக்களமாய்*
*சூரிய சந்திரர் இத்*
*தொல்லுல குள்ளளவும்* *(மண்டபம்)*

# சித்திரை மன்னவன்

**இராகம்—ஆரபி** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*நித்தமும் வாழ்கவே!—உலகாண்டு*
*நித்தமும் வாழ்கவே!*

**அநுபல்லவி**

*பத்தர் பணியும் ஸ்ரீ*
*பத்ம நாப னருளால்*
*எத்திசையும் போற்ற*
*இந்திரனைப் போல (நித்தமும்)*

**சரணம்**

*ஞாலம் புகழ வஞ்சியில்—பொறுப்பாட்சி*
*நாட்டி நலம் கண்டவன்,*
*ஆலய வாசலை*
*அனைவர்க்கும் திறந்தவன்*
*மூலமன் சூடிய*
*முடி சூடப் பிறந்தவன்,*
*சீலம் சிறந்தவன்*
*சித்திரை மன்னவன் (நித்தமும்)*

# அண்ணாமலை முகில்

**இராகம்—ஸிம்மேந்திர மத்யமம்** **தாளம்—ஆதி**

**பல்லவி**

*பாரி நீ தானையா!—பாரில் உனக்*
*காரிணை ஆவாரையா!*

**அநுபல்லவி**

*வாரிப் பொருள் வழங்கி*
*வறுமைப் பிணியகற்றும்* (பாரி)

**சரணம**

*தமிழிசைப்பயிர் என்றும்*
*தழைத்து வளர்ந்து வர*
*அமிழ்த மழைபொழியும்*
*அண்ணா மலைமுகிலே!* (பாரி)

*பற்பல கலைகளும்*
*பல்கி வளர்ந்து வர*
*கற்பகம்போல உள்ளம்*
*கனிந்து பொருள் வழங்கும்* (பாரி)

*பெண்ணொரும் பாகன்தில்லைப்*
*பெருமானடி மறவா*
*அண்ணா மலையரசே!*
*அமுத குணக்கடலே!* (பாரி)

## காந்தி மகான்

**இராகம்—ஆபோகி** **தாளம்—ஆதி**

பல்லவி

*புண்ணிய மூர்த்தி யம்மா !—நம் காந்திமகான்*
*புண்ணிய மூர்த்தி யம்மா !*

**அநுபல்லவி**

*எண்ணி லடங்கா மக்கள்*
*இதயங்கள் அனைத்தையும்*
*தண்ணருட் செங்கோ லோச்சித்*
*தனியரசாளவந்த (புண்ணிய)*

**சரணம்**

*ஏதும் கதியிலாத*
*எளியரைக் காப்பதற்கு*
*ஜாதி சமயக் கொடும்*
*சண்டை ஒழிப்பதற்குத்*
*தீதிலா அறப் போரில்*
*ஜயக்கொடி நாட்டுதற்குப்*
*போதி மாதவனெனப்*
*புவியில் அவதரித்த (புண்ணிய)*

## சுதந்திர சூரியன்

**இராகம்**—ரேவகுப்தி **தாளம்**—ரூபகம்

**பல்லவி**

சூரிய னுதித்தது பார் !—சுதந்திர
சூரிய னுதித்தது பார் !

**அநுபல்லவி**

சீரிய ஸர்வஜித் வருஷம்
சிறந்த ஆடி முப்பதினில்
தேரும் முனிவர் அரவிந்தர்
ஜன்ம நாளாம் திருநாளில் (சூரிய)

**சரணம்**

பார தத்தைச் சூழ்ந்த இருட்
படலம் சிதறி ஒழிந்திடவே
வீர முரசம் முழங்கிடவே
வெற்றிக் கொடிகள் பறந்திடவே (சூரிய)

புத்தம் புதிய கருத்துக்கள்
புலவர் கவியில் பூத்திடவே
சித்தம் மகிழப் பூவையர்கள்
தேவ கீதம் பாடிடவே (சூரிய)

விஞ்சும் தொழில்கள் பற்பலவும்
மேன்மே லோங்கி வளர்ந்திடவே (சூரிய)

அடிமைக் குணம்வே ரற்றிடவே
ஆண்மை ஆக்கம் பெருகிடவே
மடிமை என்றும் மடிந்திடவே
மனதில் ஊக்கம் பிறந்திடவே (சூரிய)

வஞ்சம் ஓடி மறைந்திடவே
வாய்மை எங்கும் மலிந்திடவே
பஞ்சம் பிணிகள் அகன்றிடவே
பாக்ய லக்ஷ்மி நடமிடவே (சூரிய)

திலகர் முதலோர் முன்னாளில்
செய்த தியாகம் பலனுறவே
உலகம் புகழும் காந்திமகான்
உள்ளத் துவகை பொங்கிடவே (சூரிய)

# பாக்கியத் திருநாள்

**இராகம்—நவரஸக் கன்னட** **தாளம்—ஆதி**

**பல்லவி**

பாரதத் தாய் செய்த—தவத்தால்
பாக்கியம் பிறந்த நாளாம்

**அநுபல்லவி**

சீரிய ராக மக்கள்
சிறந்திடச் சுதந்திர
சூரியன் வந்துதித்த
தூய நன்னாளே (பாரதத்)

**சரணம்**

வாளமர் செய் துலகம்—நரகமாய்
மாறி வருந்திடாமல்,
ஆளும் அரசுரிமை
அறப்போரினு லடைந்தெந்
நாளும் விளங்க வெற்றி
நாட்டிய நாளே (பாரதத்)

மடமை மறைந்து நிதமும்—கலைகள்
வளர்ந்து வளர்ந்து வரவே,
மிடிமை ஒழிந் தறங்கள்
மேன்மேலும் ஓங்கிடவே,
கொடுமை தணிந் தரசு
குடியர சாகிடவே
அடிமைத் தளை யறுத்த
ஆகஸ்டு பதினைந்தே (பாரதத்)

## சுதந்திரக் கொடி

**இராகம்**—*கமாஸ்* **தாளம்**—*திச்ரஏகம்*

**பல்லவி**

*கொடி யிதுவேயாம்—வெற்றிதரு*
*கொடி யிதுவேயாம்*

**அநுபல்லவி**

*படியில் இமய மலேயின் முடியில்*
*பறந்து நிதமும் சிறந்து விளங்கும் (கொடி)*

**சரணம்**

*சத்தியம் காக்கும் கொடி—சுதந்திர*
*சக்தி யுண்டாக்கும் கொடி,*
*சித்தந் தெளிந்திடவே—ஊழியங்கள்*
*செய்திடத் தூண்டும் கொடி,*
*உத்தம வீரரும்*
*பத்தினிப் பெண்டிரும்*
*தத்தம் உயிரென*
*நித்தமும் போற்றிடும் (கொடி)*

*தீதெலாம் ஓட்டும் கொடி—பாரத*
*தேவி பாராட்டும் கொடி,*
*ஓதிய ராட்டினமே—கதியெனும்*
*உண்மை உணர்த்தும் கொடி,*

சாதிமத பேதம்
ஏதுமிலா நடு
நீதியை நாட்டில்எவ்
வீதியும் நாட்டிடும் (கொடி)

பட்டினி போக்கும் கொடி—நமக்குநற்
பாக்கியம் சேர்க்கும்கொடி,
இட்டமாய் யாவருமே—இணங்கி
இருந்திடச் செய்யும் கொடி
ஓட்டுக் குடிசையில்
ஓங்கிய மேடையில்
எட்டுத் திசையினில்
எங்கும் எழுந்திடும் (கொடி)

# பெற்ற சுதந்திரம்

**இராகம்**—ஸாவேரி **தாளம்**—ரூபகம்

**பல்லவி**

உன்னையே நம்பினேன் அம்மா !—உறுதுணைவே
றொருவரும் இல்லை அம்மா !

**அநுபல்லவி**

அன்னையே ! அழகியே !
அகிலாண்ட நாயகியே !
தென்னர் குலவிளக்கே !
தேவிமீ னாட்சியே ! (உன்னையே)

**சரணம்**

முடிகொண்ட மன்னரெல்லாம்
முடிந்து முழுகிப் போனார்,
குடிகண்ட ஆட்சியிலும்
குழப்பம் ஒடுங்கக் காணோம்,
வெடிகுண்டு வீசிமக்கள்
விளையாடத் துணிந் திட்டார்,
பொடியுண் டழிந்திடாமல்
புவனம் முழுதுங் காக்க (உன்னையே)

குற்றம் குறைக ளெல்லாம்
குணமாக மாறுதற்குச்
சுற்றும் பகையை முற்றும்
துரத்தி ஒடுக்குதற்கு
வெற்றி சிறப்பதற்கு
வீரம் தழைப்ப தற்குப்
பெற்ற சுதந்தி ரத்தைப்
பேணி வளர்ப்பதற்கு (உன்னையே)

# விண்ணப்பம்

## இராகதாளமாலிகை

*பாலைவனம் சோலைவன மாக வேண்டும்*
*பசுங்கிளிகள் அங்கிருந்து பாடவேண்டும் ;*
*சாலைகளிற் பலதொழிலும் பெருக வேண்டும்*
*சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும் ;*
*சீலஉடை கதருடையாய்த் திகழ வேண்டும்*
*தேசபக்தி செழித்தோங்கி வளர வேண்டும் ;*
*வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியவேண்டும்*
*வெற்றியின்மேல் வெற்றி எமக் கெய்த வேண்டும்.*

*கஞ்சாவை நஞ்சாகக் கருத வேண்டும்*
*கள்ளொழுகும் கடைவாயை மூட வேண்டும் ;*
*அஞ்சாத வீரரெங்கும் தோன்ற வேண்டும்*
*அகிம்சா தருமமவர் பேண வேண்டும் ;*
*என்சாதி உயர்சாதி இழிந்த சாதி*
*என்றுசொல நாவுமெழா திருக்க வேண்டும் ;*
*நெஞ்சாரும் நினைப்பெல்லாம் நிகழ்த்தி நின்றேன்*
*நின்மலனே இரங்கி நீ அருள்செய் வாயே.*

*பருவமழை பொய்யாது பெய்ய வேண்டும்*
*பயிர்களெலாம் செழித்தோங்கி வளர வேண்டும் ;*
*தருமநெறி தவறாது தழைக்க வேண்டும்*
*சாதிமதச் சண்டையெலாம் ஒழிய வேண்டும் ;*
*திருமகளும் கலைமகளும் சிறக்க வேண்டும்*
*தேசாபி மானமெங்கும் திகழ வேண்டும் ;*
*கருமமெலாம் நற்கரும மாக வேண்டும்*
*காந்திமதி நின்னடிகள் வாழ்த்தி னேனே.*

# பாடல் முதற்குறிப்பு அகராதி